# மொழிபெயர்ப்பியல் ஆய்வு

(கட்டுரைத் தொகுதி)

செ. இராஜேஸ்வரி M.A., M.Phil., Ph.D.,

செல்லையா பதிப்பகம்

மதுரை

1992

# மொழிபெயர்ப்பியல் ஆய்வு

(கட்டுரைத் தொகுதி)

செ. ராஜேஸ்வரி M.A., M.Phil., Ph. D.,

செல்லையா பதிப்பகம்
மதுரை.
1992

## நூல் விபரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மொழிபெயர்ப்பியல் ஆய்வு (கட்டுரைத் தொகுதி) |
| மொழி | : | தமிழ் |
| நூலாசிரியர் | : | செ. இராஜேஸ்வரி |
| பதிப்புரிமை | : | ஆசிரியைக்கு |
| நூல் அளவு | : | 22செமீ X 14செமீ |
| பக்கங்கள் | : | 106 |
| படிகள் | : | 800 |
| அச்சகம் | : | ரெயின்போ பிரின்டர்ஸ் |
| விலை | : | ரூ. 30 |
| பதிப்பகம் | : | செல்லையா பதிப்பகம், 113, அழகர் கோயில் ரோடு, தல்லாகுளம், மதுரை - 2. |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| துறை | : | மொழிபெயர்ப்பியல். |

# அணிந்துரை

*அருள் திரு. Y. ராபின்சன் லேவி*
*விவிலியப் பொதுமொழிபெயர்ப்புக் குழு*

மொழிபெயர்ப்பு இயல் பற்றித் தமிழ் மொழியில் வெளி வரும் நூல்கள் மிகச் சிலவேயாகும். அதிலும் குறிப்பாகத் தமிழ் மொழியிலிருந்து வேற்றுமொழிகளுக்கு மொழிபெயர்க்கும் போது சந்திக்கும் இடர்ப்பாடுகள் குறித்துத் தமிழ் மொழியறிந் தோர்க்குச் சிந்தனையைத் தூண்டும் வகையில் எழுதப்பட்டது இந்நூல்.

மொழிபெயர்ப்பியல் குறித்து உலகளாவிய சிந்தனை களில் இரு கோட்பாடுகள் விஞ்சி நிற்கின்றன, அதாவது, மொழிபெயர்ப்பில் முதலிடம் பெறுவது மூலமொழியா? பெறுமொழியா? என்ற கண்ணோட்டம் இவ்வுலகில் எஞ் ஞான்றும் இருந்து கொண்டேதான் இருக்கும். இன்று மொழி பெயர்ப்பியல் ஆய்வாளர்கள் இக்கோட்பாட்டு அடிப் படையில் இரு கூறாகவே பிரிந்து நிற்கின்றனர். ஆனால் மொழி நூல் அறிஞர்களைப் பொறுத்த வரையில் பெறுமொழியாள னின் கண்ணோட்டத்தில் பெறுமொழியும் மூலமொழியாளனின் கண்ணோட்டத்தில் மூல மொழியும் முதலிடம் பெறுவனவாகும், மொழிபெயர்ப்பில் பெறுமொழி மூலமொழியை விட எவ்வகையிலும் சிறந்ததன்று என்ற கண்ணோட்டம் மொழி பெயர்ப்பாளருக்குத் தேவை. மூலமொழி நூலை பெறுமொழிக்கு மாற்றுவது என்பது மூலமொழிக்குக் கிடைத்த சிறப்பேயன்றி பெறுமொழியின் சிறப்பைக் கூறுவதன்று. பெறுமொழியின் சிறப்பைக் கூற வேறு பல்லாயிர படைப்பிலக்கியங்கள் அம் மொழியில் இருக்க, அம்மொழி, மொழிபெயர்ப்பில்தான் சிறப்புப் பெற வேண்டுமென்ற கட்டாயமில்லை.

இந்நூலாசிரியை, திருமதி ராஜேஸ்வரி குறிப்பிட்டிருக்கும் சிலநடைமுறைச் சிக்கல்கள் (இயல்2) எளிதில் வெற்றிகொள்ளத் தக்கன அன்று. மொழிபெயர்ப்பில் முழுப்பண்பாட்டு விளக் கத்தையும் புகுத்திவிட முடியாது. பண்பாட்டு வினையடை

களையும் பெயரடைகளையும் அவ்வண்ணமே பாதுகாப்பது, ஆழ்ந்து கற்போருக்கு முதலில் நெருடலாகத் தோன்றினும் அது பற்றிய தொடர்கல்வி மூலம் தெளிவான பொருளை அம்மொழிச் சூழலில் பெற்றுக் கொள்ள முடியும். பண்பாட்டு இணையியங்களைப் புகுத்தி விடும்போது கோட்பாட்டு வேறுபாடுகள் புகுந்திட வாய்ப்பு உண்டு. ஏனெனில் பெறு மொழியாளனின் சிந்தனை பெறுமொழிப் பண்பாட்டைச் சுற்றி நிற்குமே தவிர மூலநூல் பண்பாட்டிற்குச் செல்லாது. இக் கருத்தை இவ் ஆசிரியை விளங்கிக் கொண்டிருப்பது பாராட் டத்தக்கது.

இதனைப் போன்றே நிகரன் கொள்கையையும் குறிப் பிடலாம். குறிப்பாக இந்நூலில் உள்ள அனைத்துக் கட்டுரை களிலும் நம் சிந்தனையைத் தூண்டும் சொல்லோவியங்கள் இடம் பெற்றுள்ளன. மொழிபெயர்ப்பியல் பற்றிய ஆய்வுக் கல்விக்கு இந்நூல் பயன்படுவது மட்டுமல்ல மிக சாதாரண மான தமிழ் வாசகனையும் இது சென்றடையும் என்பதே இந்நூலின் சிறப்பு.

28-12-92.

மதுரை,

# என்னுரை

இன்று பல்கலைக்கழக ஆய்வாளர், ஆசிரியர்களின் அரங்கேற்ற மேடையாக அச்சு ஊடகம் திகழ்கிறது. அச்சேறியவை சமூக அங்கீகாரம் பெறவேண்டி வாசகர்களின் முன் படைக்கப்படுகிறது. சமூக அங்கீகாரமே, ஆய்வுகளின் சமூகப் பயனையும் நிர்ணயக்கிறது,

இந்நோக்கத்தின் அடிப்படையில் பல்கலைக் கழகத்தில் ஆய்வு மேற்கொண்ட போது பல ஆய்விதழ்களுக்கு நான் கட்டுரைகளைப் பதிப்பிக்க வேண்டி அனுப்பினேன், இக் கட்டுரைகளைப்பதிப்பிதது ஊக்கமளித்த நாவாவின் ஆராய்ச்சி, புலமை, தமிழ்ப்பொழில், ஓங்குதமிழ், செந்தமிழ், பரல்கள், போன்றவற்றிற்கு முதற்கண் என் நன்றியைக் காணிக்கை யாக்குகிறேன்

இக்கட்டுரைகள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் நடைபெறும் புதன்வட்டக் கருத்தரங்கில் தமிழாசிரியர்கள் மற்றும் தமிழ் ஆய்வாளர்கள்முன்பு படிக்கப் பெற்றவையாகும்,

மொழிபெயர்ப்பு பற்றிய கொள்கைகளை வரையறுத்த நைடா போன்ற அறிஞர்கள் திருமறை மொழிபெயர்ப்பு களை அடிப்படையாகக் கொண்டே உருவாக்கியுள்ளனர். இதனால் கிறித்தவத் திருமறை மொழிபெயர்ப்புகள் பற்றி ஓரளவேனும் அறிந்திருப்பது இலக்கிய மொழி பெயர்ப்பியல் ஆய்வுக்குப் பேருதவி புரிகிறது. மேலும் மொழி பெயர்ப்புக் கொள்கையின் உருவாக்கப் பிண்னணியை அறிவ தற்கும் பின்னர் அவற்றை இலக்கிய மொழிபெயர்ப்புகளில் பொருத்திப் பார்ப்பதற்கும் திருமறை மொழிபெயர்ப்பறிவு உதவும் என்பதில் ஐயமில்லை. இக்கண்ணோட்டத்தில் தான் திருமறை மொழிபெயர்ப்புச் சான்றுகள் இந்நூலினுள் ஆங்காங்கு எடுத்தாளப்பட்டுள்ளன.

மொழிபெயர்ப்பு மூலநூலின் படைப்பை மறுபடைப்புச் செய்வதாகையால் மூலநூலாசிரியர் கருத்து, மூலமொழிப் பண் பாடு, மூலமொழி இயல்பு ஆகியவற்றிற்கு நம்பகமானதாக

இருக்க வேண்டும். பெறுமொழியில் வெளிவரும் படைப்பு மூலநூல் பெயரில் வெளிவரும் பெறுமொழிப்படைப்பாக இருக்கக் கூடாது. பெறுமொழியில் மூலநூலின் பிரதிபலிப்பாக இருக்க வேண்டும். மேலும் வாசிப்புத்தன்மையுடையதாகவும் இருக்கவேண்டும். எனவே ஒரு சிறந்த மொழிபெயர்ப்பு என்பது மூலநூலுக்கு நம்பகமானதாகவும் பெறுமொழியில் வாசிப்ப தற்கேற்றதாகவும் அமைந்திருக்க வேண்டும். இக்கருத்தின் அடிப்படையில் இந்நூலில் காணப்படும் மொழிபெயர்ப்பு ஆய்வுக் கட்டுரைகள் அமைந்துள்ளன.

என் ஆய்வினை நெறிப்படுத்திய முனைவர் இரா. மோகன் அவர்கள் இந்நூலுக்கு வாழ்த்துரையும் வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு என் நன்றியும் வணக்கமும் உரித்தாகுக. மொழி பெயர்ப்பியல் ஆய்வுக்கு பன்மொழியறிவின் இன்றியமையா மையை வலியுறுத்தி கிரேக்க, எபிரேய மொழிகளைக் கற்பித்த ஆசிரியப் பெருந்தகை அருள்திரு ராபின்சன் லேவி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு என்றென்றும் நன்றியுடையேன். மற்றும் இந்நூல் உருவாக்கத்திற்கு உதவிய அன்புள்ளங்கள் அனைவருக்கும் நன்றி நன்றி நன்றி!

நூல் பற்றிய விமர்சனங்கள் ஆய்வின் மேம்பாட்டுக்கும் ஆய்வாளரின் ஆராய்ச்சித் திறனுக்கும் உதவுவது திண்ணம்.

செ. ராஜேஸ்வரி

# பொருளடக்கம்

# மொழிபெயர்ப்பில் நிகரன் கொள்கையும் வகைகளும்

ஒரு மொழியில் கூறப்பட்டுள்ள செய்தியை மற்றொரு மொழிக்குப் பெயர்த்தளிப்பது மொழி பெயர்ப்பு ஆகும். செய்தியைத் தரும் மொழி 'மூல மொழி' (Source Language) என்றும் செய்தியைப் பெறும் மொழி 'பெறு மொழி' (Receptor Language) அல்லது 'இலக்கு மொழி' (Target Language) என்றும் அழைக்கப்பெறும். மூலமொழியில் காணப்பெறும் ஒரு சொல் அல்லது கருத்துக்கு நிகரான சொல் அல்லது கருத்தினை மொழி பெயர்ப்பிலும் அமைத்தல் வேண்டும் அவ்வாறு அமையப் பெறும் பெறுமொழிச் சொல் மூலமொழிச் சொல்லுக்குரிய இயல்பான நெருங்கிய நிகரனாக (Natural Closest Equivalent) அமையும். இந் நிகரனின் பொருத்தப்பாட்டினை (Suitability) அல்லது நிகர்மையை ஆராய்வது 'நிகரன் கொள்கை' (Theory of Equivalence) எனப்படும்.

நிகரன் கொள்கையை மொழியியல் இலக்கியம், குறியியல் எனப்பல்வேறு துறையைச் சார்ந்த அறிஞர்கள் உருவாக்கியுள்ளனர். மொழிபெயர்ப்புத் திறனாய்வு தொடங்கிய நாள்முதல் நிகரன் பற்றிய சிந்தனையும் தொடங்கி விட்டது. மூலமொழி வாசகருக்கும் மொழிபெயர்ப்பு வாசகருக்கும் நிகரன் பற்றிய சிந்தனை எழுவதில்லை. இருமொழிப் புலமை நிரம்பிய திறனாய்வாளர்களே நிகரன் ஆய்வில் பல்வேறு கொள்கைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

இக்கொள்கைகளை ஆராய்ந்து அவற்றில் ஏற்படும் சிக்கல்களைச் சான்றுகளுடன் விவாதிப்பது இக்கட்டுரையின நோக்கமாகும்.

## நிகரன் கொள்கைகள்

தியோடெர் சேவரி, ஜே. சி. காட்ஃபோர்டு, யூன் நைடா, ஆண்ட்டன் போப்போவிக், நியூ பெர்ட் மற்றும் லோத்ஃபூர் சையதி போன்றோர் நிகரன் பற்றிய கொள்கைகளை விளக்கியுள்ளனர். அவை வருமாறு :

1. மாய நிகரன் (Illusory Equivalent)
2. பாட நிகரன் (Textual Equivalent)
3. இயக்க நிகரன் (Dynamic Equivalent)
4. மொழியியல் நிகரன் (Linguistic Equivalent)
5. நடையியல் நிகரன் (Stylistic Equivalent)
6. சொற்படிவ நிகரன் (Paradigmatic Equivalent)
7. பொருள் நிகரன் (Semantic Equivalent)
8. பயன்வழியியல் நிகரன் (Pragmatic Equivalent)
9. தொடர் நிகரன் (Syntactic Equivalent)
10. தொடர்பியல் நிகரன் (Communicative Equivalent)

சேவரி, மொழிபெயர்ப்பை ஒரு கலையாகக் கருதுவதனால் மூலநூற் கருத்துக்கு மொழிபெயர்ப்பில் நிகரன் அமைப்பது பற்றிய சிக்கலை உணர்ந்தவராக இருக்கிறார் காட்ஃபோர்டு ஒரு மொழியியல் அறிஞர். இவர் வாக்கியத்தை மொழிபெயர்ப்பின் அலகாகக் கொண்டு பாட நிகரன் பற்றி விளக்குகிறார். நைடா திருமறை மொழிபெயர்ப்புக்கு உதவும் நோக்குடைய ஆங்கில மொழியியலாளர். இவர் எல்லாச் சொல்லுக்கும் கருத்துக்கும் நிகரன் காண்பது இயலும் என்ற கொள்கை உடையவர். மேலும் இவர் நிகரன் ஏற்படுத்த வேண்டிய விளைவு பற்றியும் விரிவாகக் கூறுகிறார். நியூபெர்ட் குறியியல் அணுகுமுறையில் மொழிபெயர்ப்பில் நிகரன்களை வகைப்படுத்தியுள்ளார்.

## 1. மாயத் தொடர்பு / மாய நிகரன் (Illusory Correspondence / Equivalence)

மூலமொழியாசிரியர் கையாண்டுள்ள சொல்லுக்கு நிகரான ஒரு சொல்லைத் தேர்ந்தெடுக்கும் மொழிபெயர்ப்பாசிரியர், அப் பெறுமொழிச் சொல் மூலமொழிக் கருத்தைப்

புலப்படுத்துவதாகக் கருதிக்கொள்கிறார் உண்மையில் அவ்வா றாக அச்சொல் பொருளைப் புலப்படுததாவிட்டாலும் மொழி பெயர்ப்பாசிரியரின் மாயை அச்சொல்லை உரிய நிகரனாகக் கருதச்செய்கிறது.

திருமறை மொழிபெயர்ப்பில் 'பிஸ்டோஸ்' πιστός எனும் கிரேக்கச் சொல்லுக்கு 'விசுவாசம்' என்னும் நிகரன் கொடுக் கப்பட்டுள்ளது. இதனைப் 'பற்றுறுதி' என்று, புதிய மொழி பெயர்ப்பாளர்கள் மொழிபெயர்ததுள்ளனர். ஆனால் பழமை வாதிகள் இப்புதிய மொழிபெயர்ப்பை ஏற்கத் தயங்குகின்றனர். இவர்களிடம் 'விசுவாசம்' என்னும் சொல் மூலமொழியின் கருத்தினைச் செவ்வனே புலப்படுத்துவதாக ஒரு மாயை இருக்கிறது. ஆனால் மூலமொழிச் சொல் தரும் 'இறைப் பற்றில் உறுதியாக இருத்தல்' எனனும் பொருள் பெறுமொழிச் சொல்லான 'பற்றுறுதி'யில் புலனாவது திண்ணம். எனினும் கடன் சொல்லான 'விசுவாசம்' பொருட் செறிவுடையதாகும் எனக் கருதுவது அச்சொல்லுக்கும் வாசகருக்கும் இடையிலான மாயத் தொடர்பாகும்.

மொழிபெயர்ப்பில் பல சூழல்களில் தக்க பெறுமொழிச் சொல் இருந்த போதிலும் சமய, தத்துவ மொழிபெயர்ப்பாளர் கடன் சொல்லைப் பெரிதும் சார்ந்திருப்பதன் அடிப்படைக் காரணம், புதிய வரவுடைய கடன் சொல்லைப்பொருட் செறிவுடையதாகக் கருதுவதேயாகும்.

## 2. பாட நிகரன்

ஜே சி காட்ஃபோர்டு என்னும் மொழியியலறிஞர் நிகரன் பற்றிக் கூறுமிடத்தில்' மொழிபெயர்ப்பாசிரியர் சொல்லின் பொருளுக்கு நிகரன் தேடுவதில்லை. மாறாக, மூலநூலில் காணப்படும் சூழலை இலக்குமொழியில் உருவாக்கித் தருகின்றார்' என்கிறார். இவர் பாட நிகரனைச சூழல சார்ந்த நிகரன (Contextual Equivalent) என்றும், பாடம் சார்ந்த நிகரன் (Co-textnal Equivalet) என்றும் வகைப்படுத்துகிறார். இவ் அறிஞர் இலக்கிய மொழிபெயர்ப்ப துறையைத் தம் ஆராய்ச்சிக களமாகக் கொண்டு

வில்லை. இலக்கியத்தில் ஒரு மொழியில் ஒரே பொருட்களத்தில் அமையும் சொற்கள் கூடத் தம்மிடையே குறிப்பிடத்தக்க பொருள் வேறுபாட்டைக் கொண்டிருக்கும். அவ்வாறிருக்க, ஒரு மொழிப்பாடத்திற்கு நிகரான பெறுமொழிப் பாடத்தைக் கண்டறிவது என்பது அரிய முயற்சியேயாகும்.

சான்றாக, காமம், காதல், நட்பு, அன்பு ஆகிய சொற்களைச் சங்கப்புலவர்கள் ஒத்த தலைமக்களிடையே ஏற்படும உள்ளப் பிணைப்பை உணர்த்தப் பயன்படுத்தியுள்ளனர். ஆங்கிலத்தில் இச்சொற்களை மொழிபெயர்தத ஏ.கே. இராமானுஜன் 'love' எனற ஒரே சொல்லை மட்டும் பயன்படுத்தியுள்ளார். மேற்காணும் சொற்களுக்கு lust, love, friendship, affection போன்ற நிகரன்கள் பெறுமொழியில் காணப்பட்டபோதும் கூட, பாடற் சூழல் காதலரின் உள்ளக் கருத்தை உணர்த்துவதால் அனைத்துச் சொற்களுக்கும், 'love' என்ற நிகரனை மொழிபெயர்ப்பாசிரியர் தேர்ந்தெடுத்துள்ளார். சூழலேற்றத்தில் சொல்லுருவங்கள் முதன்மை பெறுவதில்லை. எனவேதான் சொல்லிற்குரிய நிகரனை அளிக்காமல் சூழலுக்கேற்ற நிகரனை மொழிபெயர்ப்பாசிரியர் அளித்துள்ளார்

காட்ஃபோர்டு என்னும் அறிஞரும் பெறுமொழியில் நிகரான சூழலை உருவாக்குவதை ஆதரித்துள்ளார். பாட் நிகரன் மூலநூற் சொல்லிலைபத்தை மொழிபெயர்ப்பில் அளிப்ப தில்லை, என்பது அவர் கருத்து.

## 3. இயக்க நிகரன்

நைடாவும் டேபரும் வகைப்படுத்தியுள்ள இயக்க நிகரன் மற்றும் உருவத்தொடர்பு (Formal Correspondence) பற்றிய கொள்கைகள் அவர்கள் காலத்தில் மொழிபெயர்ப்பாசிரியரிடையே வழங்கி வந்த புதிய, பழைய மனப்போக்குகளைத் (Attitudes) தெளிவுபடுத்துகின்றன. கிறித்தவத் திருமறையை மூலமொழியில் கற்றுணர்ந்தோர் செயல்படும் விதத்தில், அதன் மொழிபெயர்ப்பைக் கற்கும் பிறமொழியினரும் செயல்படவேண்டும் என்ற எதிர்பார்ப்பில இயக்க நிகரன்களை இவ் ஆசிரியர்கள் வலியுறுத்தினர். நைடாவின

கிறித்தவ சமயச்சார்பு இந் நிகரன் கொள்கைக்குப் பின்னணியாக அமைவதனை உணரலாம். கிறித்தவத் திருமறை மொழிபெயர்ப்பின் முதல்நோக்கம் கிறிஸ்துவின் செய்தியைப் பரப்புவதாகும். இந்நோக்கத்திற்கேற்ப இயக்க நிகரன் கொள்கை நைடாவினால் வலியுறுத்தப்பட்டுள்ளது. இதனால் மொழிபெயர்ப்பைப் படிக்கும் வாசகர் மூலநூல் வாசகரின் உணர்வைப் பெறுவாரேயானால் முழுமையான கிறிஸ்தவப் பற்றுறுதி கொண்டவராக அவர் இயங்குவது திண்ணம்.

மொழியியல், சமய, சமூகப் பின்னணியில் இயக்க நிகரன் கொள்கையை ஆராய்ந்தால் நைடாவின் கருத்து சமயச் சார்புடையதாய் இருப்பது புலனாகும். ஏனெனில் வாசகரை இயக்குவித்தலில் மொழிபெயர்ப்பு மட்டுமின்றி வாசகரின் புரிதிறனும் (Understanding) முக்கியப் பங்கு பெறுகின்றது. மொழிபெயர்ப்பு வேறுமொழி பேசும் வேற்றினப் பண்பாடு பற்றியது. இதனைப் புதிய வாசகர்கள் மொழி பெயர்ப்பில் படிக்கும்போது முழுமையாகப் புரிந்துகொள்வதும் உணர்வதும் சிக்கல் ஆகும். அறிந்துகொள்ளும் வாசகர்களால் கூட அவற்றைத் தம் உணர்ச்சியால் உணர்ந்து கொள்வது இயலாது.

ஒரு மொழிபெயர்ப்புச் செய்தியை அறிவது வேறு; உணர்வதுவேறு உணர்வதவரால் இயங்குவது இயலாது. ஆனால் உணர்வததற்கு மொழி மட்டுமே போதாது. வேறு பல பின்னணிகளும் இதற்குத் தேவை. இந் நிலையில் இயக்க நிகரன்களைக் கண்டிட முற்படுவது கடுமையான முயற்சியாகும்.

## 4. மொழியியல் நிகரன்

ஆன்ட்டன் போப்போவிக் என்னும் அறிஞர் வகைப்படுத்தும் நான்கு நிகரன்களுள் இதுவும் ஒன்று. மொழியியல் நிகரன், சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பதைக் (Word for Word Translation) குறிக்கும். இதனால் இந் நிகரன் (Lexical Equivalent) என்றும் அழைக்கப்பெறும். மூலநூல் சொல் அல்லது தொடர் இடம்பெறும் இலக்கணச் சூழலை அறிந்து அதனைப் பெறுமொழிச் சொல்லாக அல்லது தொடராக மொழிபெயர்க்க வேண்டும்.

நைடா ஒரு சொல்லுக்குப் பொருளறியும் முயற்சியில் அச்சொல் இடம்பெறும் தொடர்நிலையிலும் (Syntactic), அச்சொல்லுக்கு முன்பின் இடம்பெறும் சொற்களின் பொருளை ஒப்பிட்டும் (Semotactic) காண வேண்டும் என்பார். சான்றாக, 'அது ஒரு நரி' 'அவன் ஒரு நரி' என்பனவற்றில் 'நரி' எனும் சொல் உணர்த்தும் பொருள் வெவ்வேறாக இருப்பது புலனாகும். எனவே சொல்லுக்குச் சொல் நிகரன காணும் முயற்சி ஒருவேளை பயனளிப்பதாக அமையும்; அல்லது இந் நிகரன் பொருளற்ற மொழிபெயர்ப்பை அளிக்கும்.

மரபுப்பொருள் (Conventional Meaning) உடைய சொற்களை மொழியியல் நிகரன்களால் மொழிபெயர்ப்பது தவறான முறையாகும். சான்றாக, 'வடவைத் தீ' என்பதனைப் 'பசி' எனக் கொண்டு மொழி பெயர்க்காமல் 'fire in the belly' என மொழிபெயர்ப்பது பெறுமொழி வாசகருக்கு மருட்சியை உண்டாக்கும். 'வடவைத் தீ'யில் காணப்பெறும் தொன்மப் பொருளை மொழியியல் நிகரனால் அளித்தலியலாது, ஆங்கிலத்தில் இது போன்றதொரு தொன்ம நிகரனைத், (Mythical Equivalent) தேர்ந்தெடுத்தால் மட்டுமே தொன்மப் பொருளை வாசகருக்கு உணர்த்த முடியும். எனவே மரபு சார்ந்த சொற்களுக்கு மொழியியல் நிகரன்கள் பயன்படா.

சொற்களின் இலக்கண அமைப்பை மாற்றாமல் மொழி பெயர்க்கும்போது இந் நிகரன் பயன்படுகிறது. சான்று, 'மீனுன் கொக்கின் தூவியன்ன' தாயின் நரைத்த கூந்தல் இருப்பதைப் புறநானூற்றுத் தொடர் ஒன்று புலப்படுத்துகிறது. இத்தொடரிலுள்ள "மீனுன் கொக்கு" — "Fisher heron" என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. "கன்றும் உண்ணாது கலத்தினும் படாஅது, நல்லான் தீம்பால் நிலத்துக் காங்கு" என வரும் குறுந்தொகை வரிகளில் "நல்லான் தீம்பால்", 'Good cow's sweet milk' என ஏ. கே. இராமானுஜனால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது'

இலக்கண அமைப்பு வேறுபட்ட மொழிகளிடையே மொழியியல் நிகரன்களைப் பயன்படுத்துவது சிக்கலான பணியாகும். எடுத்துக்காட்டாக,

அவ்வெண்ணிலவு - That white light

இம்மொழிபெயர்ப்பில் 'அ' எனும் சுட்டெழுத்து ஆங்கிலத்தில் சுட்டுப்பெயராக(Demonstrative Pronoun)இடம்பெற்றுள்ளது.

உணர்ச்சிச் சொற்களை மொழிபெயர்ப்பதிலும் மொழியியல் நிகரன்கள் பயன் தரா. 'அளிய தாமே', 'ஐயோ எனின்' என்பவை மொழியியல் நிகரன்களால் மொழிபெயர்க்கப்பட முடியாதனவாகும். Alasl Lol என்பவை ஓரளவு பயன்படக் கூடும். ஆனால் இவை மொழியியல் நிகரன்கள் ஆகா.

மொழியியல் நிகரன்கள் பருப்பொருட்டானவற்றைக் குறிக்கும் போதும், உலகப் பொதுவான செய்திகளை விளக்கும் போதும் மொழிபெயர்ப்பில் பயன்படும். நுட்பமாக உணர்ச்சிகளைப் புலப்படுத்தும்போதும், தன் அனுபவங்களை வெளிப்படுத்தும் போதும் இந் நிகரன்கள் சிக்கலை ஏற்படுத்தும்.

**5 நடை நிகரன்**

**போப்போவிக்**, மூலமொழியில் நடைக்கு அல்லது செயற்பாட்டிற்கு நிகராக மொழிபெயர்ப்பிலும் நடையை அமைப்பதனை 'நடை நிகரன்' என்கிறார். எதுகை, மோனை, வண்ணம், இயைபு, ஒலிக்குறிப்பு, வட்டார வழக்கு, மங்கலச் சொல், புதுப்பொருள், அடை, தொடர்க்கட்டு, பழமொழி ஆசிரியரின் அனுபவப் பாதிப்பு போன்றன நடைக்கூறுகளாகும். இவற்றை மொழிபெயர்க்கும்போது மூலநூலின் தன்மை மாறாமல் ஏற்புடைய நிகரனைத் தேர்ந்தெடுப்பது இன்றியமையாததாகும்.

நுவல்பொருளுக்கு ஏற்ப ஒலிகளை அமைக்கும் பாங்கினை 'ஒலி வண்ணம்' என்பர். ஒலிநயமுடைய மூலமொழிச் சொற்களுக்கு நிகரான பெறுமொழிச் சொற்களைந் தேர்ந்தெடுப்பது நடை நிகரன்களை அமைக்க உதவும். இந் நிகரன்கள் மூலமொழியின்பத்தை மொழிபெயர்ப்புக்கும் அளிக்கும். சான்றாக,

''குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்''

புறம்.188

என்ற வரிகளின் மொழிபெயர்ப்பில் ஏ.கே இராமானுஜன்

"Who patter on their little feet
stretch tiny hands
scatter touch,
grub with mouths, and
grab with fingers"

என நடை நிகரன்களைப் பயன்படுத்தியுள்ளார். 'குறுகுறு' என்பதன் ஒலி நயத்தை 'patter, little' என்பவற்றிலும், 'சிறுகை'யை 'stretch.tiny' (சிறு) என்பவற்றிலும், அடுத்த வரியில் இடம்பெறும் டகர இரட்டிப்பு ஒலியும் உம்மை நயமும் 'grub with', 'grab with' என்பவற்றிலும் மொழி பெயர்ப்பாசிரியர் அமைக்க முன்வந்துள்ளார்.

ஒலிநயத்தை மையமிட்ட நடை நிகரன்கள்தாம் மொழி பெயர்ப்புக்கு அழகியல் தன்மையை அளிக்கின்றன; இல்லை யெனில், இம் மொழிபெயர்ப்பு வெறும் செய்தியாக மட்டுமே அமைந்திருக்கும்.

## 6. தொடர் நிகரன்

குறியியல் அணுகுமுறையில் மொழிபெயர்ப்பு நிகரன் களை ஆராய்ந்த நியூபெர்ட் எனும் அறிஞர் தொடர் நிகரன பொருள் நிகரன், பயன்வழியியல் நிகரன் என்று மூன்றாக நிகரனை வகைப்படுத்துகிறார். தொடர் நிகரன்கள் சொற் பொருள் பின்னணியை உடையன; இலக்கண அமைப்புச் சார்ந்தன; நைடா கூறுவது போல 'பொருள் நிரம்பிய சொல் தொகுதிகளை' மொழிபெயர்ப்பின அடிப்படை அலகுகளாக இத் தொடர் நிகரன் கொண்டிருக்கிறது.

தமிழ் மொழியின் மரபிலக்கணம் தொடர்களை வேற் றுமைத் தொடர் அன்மொழிததொடர் எனவும், தொகைநிலைத் தொடர், தொகா நிலைத்தொடர் எனவும் பகுத்துள்ளது. இவ் அமைப்பினை அடிப்படையாகக் கொண்டும் தொடர் நிகரன் களை ஆராயலாம். மொழிபெயர்ப்பாசிரியர் தொடர் பிரிப்பதில் கவனமும் கருத்தும் உடையவராய் இருத்தல் வேண்டும். தொடர் பிரிப்பதில் தவறு ஏற்படுமானால் தவறான மொழி பெயர்ப்பைத் (Mistranslation) தர நேரிடும். மொழியியலாரின் 'அண்மையுறுப்பு ஆய்வு' (Analysis of Immediate Constituent) தொடர் பிரிப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது.

தமிழ்த் தொடர் அமைப்பில் பல அடைமொழிகளை அடுத்துப் பெயர்ச்சொல் இடம்பெறுவதில்லை. இதனால் பழந் தமிழ் செய்யுள்களில்விரிவானவருணணையைக் காணவியலாது எனக் கூறும் ஜி.எல். ஹார்ட், குறிப்புப் பொருளைத் தரவல்ல இச்செய்யுள்கள் பெயரெச்ச, வினையெச்சத் தொடர்களைக் கொண்டிருப்பதன் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார். தொடர்கள் செய்யுள் நயத்தை விரிவாக்கும் வகையில் தமிழ்ல் காணப்படுகின்றன. இதனால் குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த ஒரு தொடரை மற்றொரு வகைத் தொடராக மொழிபெயர்த் தால் மூலநூலின் சுவை மறைந்துவிடும். இதன்வழி தொடர் நிகரன்களின் தேர்வும் அவற்றின் இன்றியமையாமையும் டலனாகும்.

'யாயும் ஞாயும் யாரோ கியரோ! என்ற குறுந்தொகைப் பாடலில் இறுதியடிகளில் இடம்பெறும் உவமைத் தொடர் ஆங்கில மொழிபெயர்ப்பில் உம்மைத் தொடராக மாற்றம் பெற்றுள்ளது.

'செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே' (குறுந். 40)

என்ற வரிகளில் காணப்பெறும் உவமை 'நீர்' மட்டுமேயாகும்.

"Our hearts have mingled
like red earth and pouring rain"
(ஏ. கே. இராமானுஜன்)

என்ற மொழி பெயர்ப்பில் காணப்பெறும் தொடர்நிகரன் செம்புலமும் பெயல் நீருமாகிய இரண்டினையும் and என்ற இணைப்புச் சொல்லிட்டு விளக்குகிறது. மூலநூல் தொடர் செம்புலததில் பெய்த மழைநீரைக் குறிக்க, மொழிபெயர்ப்புத தொடர் செம்புலத்தையும் மழைநீரையும் குறித்துள்ளது.

உவமப்பொருள் மாறுபட்டு விரிவடைந்த நிலையில் மொழிபெயர்ப்பில் தொடர் நிகரன் அமைந்திருப்பது பெறு மொழி வாசகர் மூலநூற் சுவையைப் பெறத் தடையாக நிற்கும். இச் சிக்கலுக்கான தீர்வு ஏற்புடைய, இயல்பான, நெருங்கிய தொடர் நிகரனைத் தோவு செய்வதேயாகும். இதற்கு,

"Our hearts have mingled like
pouring rain in red earth"

என்று தொடர்நிகரனை அமைத்தால் பொருத்தமுற விளங்கும் இந்நிகரன் செம்புலத்தில் பெய்த மழைநீரைக் குறித்துள்ளது இதன்கண் ஏற்பட்டுள்ள மாற்றம் மூலமொழியில் காணப் பெறும் சொல் வரிசையை மாற்றியதேயாகும். ஆங்கில மொழியின் வாக்கிய அமைப்பு SVO முறையிலும், தமிழ் மொழியின் தொடர் அமைப்பு SOV முறையிலும் இருப்பது இவண் நோக்குதற்குரியது. இதன காரணமாக, 'செம்புலப் பெயனீரின்' புதைநிலையமைப்பு (Deep Structure) 'செம் புலத்தில்' (S) நீர் (மழை) (O) பெய்தது (V) என்றிருக்க, மொழி பெயர்ப்பில் 'Rain (O) poured (V) on red earth (S)' என் மாறி அமைந்துள்ளது.

## 7. பொருள் நிகரன்

நியூ பெர்ட்டின் வகைப்பாடுகள் மூன்றனுள் பொருள் நிகரனும் ஒன்றாகும். இந் நிகரன் ஒரு சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் உணர்த்துகிறது. பொருள் இரு வகைப் படும். 1. பொதுப்பொருள் (Referential Meaning) 2. குறிப்புப் பொருள் (Connotative Meaning). இவற்றை அகராதிப் பொருள், கருத்துப்பொருள் (நுண்பொருள், மரபுப்பொருள்) என்றும் வழங்குவர். மூலநூலில் ஒரு சொல் புலப்படுத்தும் பொருளை இனங்காண்பது மொழிபெயர்ப்பாசிரியரின் முதற் கடமையாகும். இதுவே இலக்கிய மொழிபெயர்ப்பின் தனித் தன்மையும் ஆகும். அறிவியல் மொழிபெயர்ப்பிலும் இயந்திரமொழிபெயர்ப்பிலும் (Machine Translation) இச் சிக்கல் ஏற்படுவது அரிது. இவ் இருவகை மொழிபெயர்ப்புகளிலும் வரையறுக்கப்பட்ட சொற்பொருள் மட்டுமே பயன்படுத்தப் படுகிறது.

'கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி! (குறுந். 2, எனத் தொடங்கும் குறுந்தொகைச் செய்யுள் மொழிபெயர்ப்பில் honey' என்னும் நிகரன் இரண்டு சூழல்களில் இடம்பெற் றுள்ளது. 'கொங்கு தேர்' என்பதனை 'in search of honey என்றும், 'பெருந்தேன் என்பதனை 'honey' என்றும் மொழிப் பெயர்ப்பாசிரியர் மொழிபெயர்த்துள்ளார். தும்பி பூந்தாதுக்

களைத் தேர்ந்தெடுக்கிறது; அதன்மூலம் நல்ல தேனைப் பெறுகிறது. ஆக, தும்பியின் வாழ்க்கை 'a life 'in search of pollen-grains' என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்க வேண்டும். பெருந்தேன் இழைக்கும்' என்பது தேனீக்கள் இழைக்கும் பெருந்தேனடைகளைக் குறிக்கிறது; தேனை அன்று. இவ் வரியில் 'பெருந்தேனு'க்குரிய பொருள் நிகரன் 'bee-hive' என்பது. 'pollen-grains' என்றும் 'bee-hive' என்றும் நிகரன்கள் அமைந்திருக்க வேண்டிய வரிகளில் 'honey' என்னும் சொல் நிகரன் (Lexical Equivalent) அமைந்தது சொற்பொருளுணர் தலில் மொழி பெயர்ப்பாசிரியருக்கு ஏற்பட்ட சிக்கலை உணர்த்துகிறது.

## 8 பயன்வழி நிகரன்

குறியியல் அணுகுமுறையில் மொழிபெயர்ப்பை ஆராய்ந்த நியூபெர்ட் நிகரன் கொள்கையில் இறுதியாகப் பயன்வழி நிகரனைக் கூறியுள்ளார். தொடர் நிகரன் பொருள்நிகரனை யும், பொருள் நிகரன் பயன்வழி நிகரனையும், பயன்வழி நிகரன் மற்ற இரண்டு நிகரன்களையும் சிறப்பிக்கிறது. இத் தொடர்பினால் ஒரு நிகரன் குறிகளுக்கிடையிலான தொடர் பையும், பின்னர் குறிகளுக்கும் கருத்துக்குமிடையிலான தொடர்பையும், இறுதியில் குறிகளுக்கிடையிலான தொடர்பு, குறிகளுக்கும் கருத்துக்குமிடையிலான தொடர்பு மற்றும் அவற்றைப் பயன்படுத்துவோரையும் விளக்கி நிற்கும் இதனால் மூலநூற் செய்தி, செய்தியின் உட்கிடை, வாசகர் ஆகிய மூன்று நிலைகளிலும் பயன்வழி நிகரன் செயல்படுகிறது.

பயன்வழி நிகரன் சூழலையும் கூற்றுமாந்தரையும உள்ளடக்கியது இதனால் இந்நிகரன் நூலாசிரியரின் நோக்கத் தையும் நூலெழுதப்பெற்ற சூழலையும் மொழிபெயர்ப்பு வாச கருக்குப் புலப்படுத்துகிறது. மொழிபெயர்ப்பு மூலநூற்பயனின கருத்துக்கு முக்கியத்துவம் அளிக்கிறது.

இலக்கியப் பயன் காலத்துக்குக் காலம் மாறுபடுகிறது. சமூகத் தேவைகளுக்கேற்ப இலக்கிய வகைளும் தோன்று கின்றன. இந் நிலையில் ஒரு நாட்டில் விடுதலைப்போர் அல்லது புரட்சி நடந்தபோது, இவை நடப்பதற்குத் தூண்டு

கோலாக விளங்கிய நூல் மற்றொரு நாட்டில் அத்தகு சூழல் உருவாகும் காலத்தில் பெரு மதிப்பைப் பெறும். சான்றாக, திராவிட இயக்க எழுத்தாளர்கள், பகுத்தறிவை வலியுறுத்திய சாக்ரடீஸ் நாடகத்தைத் தமிழில் அறிமுகம் செய்தமை; சுதந்தரப் போராட்ட காலத்தில், மனோன்மணீயத்தில் வரும் ஜீவகனின் வீர உரையும், பாரதியாரின் சத்ரபதி சிவாஜியின் சூளுரையும் தமிழில் பெரு வரவேற்பினைப் பெற்றமை; ஆங்கில நாடக ஆசிரியர் ஷேக்ஸ்பியரின் ஒதேல்லோ, ஜூலியஸ் சீசர் போன்ற நாடகங்கள் படித்தவர்களிடம் ஆதரவு பெற்றமை போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

இவை முழுமையான மொழிபெயர்ப்புகளாக அமையா விட்டாலும் இவற்றில் காணப்பெற்ற நிகரன்கள் பயன்வழி நிகரன்கள் ஆகும். சான்றாக,

'Cowards die many times before their death
but a valiant never taste the death but once'

என்று ஜூலியஸ் சீசர் தனக்கு எதிராக உள்ள சூழல்களை அறிந்தபோது கூறிய வரிகளை விபுலானந்த அடிகள் தமிழில,

'அஞ்சினர்க்கு சதா மரணம் அஞ்சாத நெஞ்சத்து
ஆடவர்க்கு ஒரு மரணம்'

என மொழிபெயர்த்தார். இவ்வரிகளில் பாட நிகரன்களை (cowards-கோழை, Valiant-வீரர்) எதிர்பார்க்க இயலாது. ஆனால், நூல் எழுந்த சூழலும் நூற்பயனும் ஒற்றுமையுடையன. எனெனில், ஜூலியஸ்சீசர் உரோம் நாட்டின் மக்களாட்சி முறையைப் புறக்கணித்து தானே முடிசூட்டிக் கொள்ள விரும்புகிறார் எனக்கருதிய அவன் நண்பர்களும் அரசவையின் முக்கிய உறுப்பினர்களும் அவனை மக்கள் முன்னிலையில் கொல்லத் திட்டமிட்டனர். இச்சூழல் ஆங்கிலேய அரசு இந்தியாவில் மக்களாட்சி நிறுவத் தடையாயிருந்ததனை ஒத்துள்ளது. எனவே தான் சுதந்திரப் போராட்ட காலத்தில் தோன்றிய இந்நூல்கள் வாசகர் மனத்தில் போராட்ட உணர்வையும் ஏற்படுத்தின. எனவே இம் மொழி பெயர்ப்புகள் பயன்வழி நிகரன்களைக் கொண்டுள்ளன.

மூலநூலின் சமூகச் சூழல் பெறுமொழி நிலத்திடையே காணப்பெறாதபோது பயன்வழி நிகரன்களைக் கொண்டு பழைய சூழலை உருவாக்க முனைவது சிக்கலான பணியாகும். இவ்வேளையில் ஆசிரியரின் கருத்துப் பின்னணியைப் பெறுமொழி வாசகர்கள் உணர்வது கடினம். சான்றாக, சங்க இலக்கிய மொழிபெயர்ப்புகளைக் கூறலாம். சங்க இலக்கியத்தைத் தற்காலச சூழலில் படிக்கும் தமிழ் வாசகரால் கூட நூலின் காலச் சூழலை ஓரளவு மட்டுமே உணரமுடியும். இவ் உணர்தலுக்கு நூல் தவிர்த்த புறக்காரணிகளும் பண்பாடும் காரணமாகின்றன. எனவே, மொழிபெயர்ப்பில் பயன்வழி நிகரன்களால் எதிர்பார்க்கும் விளைவைப் பெறுமொழி வாசகரிடம் உருவாக்க முயல்வது சிக்கலான முயற்சியாகும். இவ் இலக்கியங்களுக்குப் பாட நிகரன்களும் பொருள் நிகரன்களும் ஏற்புடையனவாய் விளங்கும்.

பயன்வழி நிகரன்கள் குறிப்பிட்ட சமூகத் தேவை மற்றும் சூழலின் போது மட்டுமே மொழிபெயர்ப்பில் பயன் பெறும். மற்ற காலங்களில் அவை மொழியியல் நிகரன்களாகக் காட்சியளிக்கும்.

## 9. சொற்படிவ நிகரன்

ஒரு சொல், தொடர்பாட்டு நிலையிலும் (Syntagmatic) இணைநிலையிலும் (Paradigmatic) பொருள் உணர்த்துகின்றது. போப்போவிக், ஒரு சொல் இணை நிலையில் பொருள் தருவதனை உணர்ந்து அதற்கேற்ற நிகரன்களை அளிப்பதனைச் சொல் நிகரனைக் காட்டிலும் உயர்வான வகையினதாகப் போற்றுகிறார்.

தொடர்பாட்டு நிலையில் இலக்கணப் பொருளைக் காணும் மொழி பெயர்ப்பாசிரியர் இரண்டாம் நிலையில் சொல்லின் அகத்தே பொதிந்துள்ள சமூகப் பண்பாட்டுப் பின்னணியை உணர்கிறார். இப்பின்னணியால் சொற்கள் வெறும் அகராதிப் பொருளுடையனவாக அன்றிப் படிவங்களாக விளங்குகின்றன.

சொற்படிவங்கள் ஒரு சமூகததில் காணும் பருப்பொருள் சாராத கருத்துக்களையும், கோட்பாடுகளையும் உணர்த்துவன இவை நிலையான மாதிரிகளாக (Constructed Models)-மூலப் படிவங்களாகச் செயல்படுகின்றன. இவை கட்புலனாகாத மறைஞானக் கருத்துக்களைப் (Mystical Ideas) பெரிதும் உணர்த்துகின்றன.

அணு ஆராய்ச்சியாளர்கள் அணுவின் அமைப்பை (Atomic Structure) C,H,O என்ற மூலகங்களால் மாதிரிப் படிவமாக்கிப் புலப்படுத்துகின்றனர். கிறித்தவ இறையியலார் இயேசு கிறிஸ்துவை இறைவனின் மாதிரிப் படிவமாக அல்லது சொற்படிவமாகக் (Paradigm of God) காண்கின்றனர். இவ்வகையில் இலக்கியங்களிலும் சில சொற்படிவங்கள் காணப்படுகின்றன.

சங்க அகத்திணைப் பாடல்களில் 'முல்லை' எனும் மலர் கற்பினை விளக்கும் சொற்படிவம் ஆகும். முல்லை நிலத்தில் முறையான கற்பு வாழ்க்கை (குடும்பம்) காட்டப்படுகின்றது. தலைவன் வினைவயின் செல்ல, தலைவி அவன் வரவுக்காக ஆற்றியிருத்தலை அங்கே காணலாம். முல்லைத் திணையின் உரிப்பொருளான இருத்தலும் இருத்தல் நிமித்தமும் கற்பு வாழ்வின் சிறப்பினை உணர்த்தும்.

'முல்லை சான்ற கற்பு' (நற் 142) எனும் தொடர் முல்லை கற்பினுக்குப் படிவமாக விளங்குவதைக் குறிக்கும். இச்சொல்லை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஜி.எல். ஹார்ட், ஜே.வி. செல்லையா, என். இரகுநாதன் போன்றோர் இதனை ஒரு சொற்படிவமாகக் கருதவில்லை. அவர்கள் 'Mullai' என ஒலிபெயர்த்தும், 'Jasmine' 'என மொழிபெயர்த்தும் உள்ளனர். இவ்விரு நிகரன்களும், 'முல்லை' எனும் சொல்லை, தொடர்பாட்டு நிலையில் பொருளுணர்ந்து மொழிபெயர்த்து இருப்பதனை உணர்த்துகின்றன.

ஆங்கிலத்தில் தூய்மையையும் ஒழுக்கத்தையும் குறிக்கும் சொற்படிவமாக 'Lily' மலரைக் கொண்டுள்ளனர். இப் படிவம் கன்னி மரியாளைக் குறித்துள்ளது. மரியாளைக் கற்புடையவர் எனக் காட்டும் படிவமாக 'Lily' மலர் வழங்கி

வருகின்றது. இதனை 'முல்லை'க் குரிய சொற்படிவ நிகரனாகக் கொள்ளலாம்'' மேலை நாட்டில் 'இலிலி' மலரைப் போற்றியது போல முல்லையைப் போற்றினர்'' எனத் தனிநாயக அடிகள் கூறுவது (தமிழ்த்தூது ப.55) இவண் குறிப்பிடற்குரியது.

கற்பு, ஒழுக்கம், தூய்மை என்று நிலைகளில் மூலமொழியிலும் பெறுமொழியிலும் 'முல்லை 'யும், 'Lily 'யும் நிகராகப் பயன்பட்டுள்ளன. 'Lily' சமய வழக்குடையதாக (Lily - foot இறைவனின் திருவடி) இருப்பினும் கூட, பெண்ணின் கற்பு வாழ்க்கைக்குரிய (மேனாட்டார் பண்பாட்டில் கன்னிமைக் குரிய) படிவமாக வழங்குகிறது. கிரேக்க மொழியில் கற்பு என்ற சொல் காணப்பெறவில்லை. மாறாக 'தூய்மை' என்ற சொல் 'agnes' αγνες என வழங்குகிறது. இலத்தீனில் வெண்மை' தூய்மை ஆகியவற்றை உணர்த்தும் லில்லி மலர் 'Susan'என அழைக்கப் பெறுகிறது. இதனையே இன்று கத்தோலிக்கக் கிறிஸ்தவப் பிரிவினர், அமலபுஷ்பம் (அழுக்கில்லாத மலர்), 'சிறிய புஷ்பம், (Little flower) எனப் பெயரிட்டுள்ளனர். இவை கற்புக்தச் சான்றான கன்னி மரியாளைக் குறிக்கின்றன. எனவே Lily 'என்னும் சொற்படிவ நிகரனை விலக்கி 'முல்லை'யை Jasmine' என்று மொழிபெயர்ப்பது ஏற்புடையதன்று.

அல்லி மலரைக் குறிக்க 'Water-Lily' என்னும் பெயர் இருப்பதனால் 'முல்லை'யை 'Lily' என ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது ஏற்புடையதாகும். மேலும் 'முல்லை' உணர்த்தும் சமூகப் பண்பாட்டை 'Jasmine' என்பதைக்காட்டிலும், 'Lily எனும் நிகரனால் தெளிவாகப் பெறுமொழி (ஆங்கில மொழி) வாசகர்கட்கு உணர்த்த முடியும்.

சொற்படிவ நிகரனகளைத தேர்வு செய்வது சிக்கலான பணி எனினும் இயல்பான நிகரன்கள் காணப்படும் சூழ்நிலையில அவற்றைப் பயன்படுததுவது நம்பகமான மொழிபெயர்ப்பை அளிக்கும்.

## 10. தொடர்பியல் நிகரன்

ஈரானிய அறிஞர் லோத்ஃபீபூர் சையதி, 'மூலமொழிப் பாடமும் பெறுமொழிப் பாடமும் நிகரான தொடர்பியல் தகுதியைப் (Communicative value) பெற்றிருக்குமாயின் அந்நிலையில் அம்மொழிப்பெயர்ப்பில் நிகர்மை இருப்பதனை உணரலாம் என்பார். மேலும் இவர் ஒரு நிகரன் தொடர்பியல் நிகரனுக்குரிய தகுதியைப் பெறுவதற்கு மொழிபெயர்ப்பாசிரியர் கருத்தில் கொள்ள வேண்டிய ஒன்பது நிலைகளையும் விளக்குவார். அவையாவன;

1. சொற்பொருள்
2. கட்டமைப்பு
3. பாட இயல்பு
4. வாக்கியப் பொருள்
5. கூற்றுப்பொருள்
6. முன்கருத்து
7. நடை
8. வாசகர் அறிவு
9. இலக்கிய விளைவு

சையதியின் கருத்துப்படி தொடர்பியலில் அல்லது ஆசிரிய-வாசகர் கருத்துப் பரிமாற்றத்தில் நிகரன்களைப் பொருத்த முற அமைப்பதற்குத் தடையாய் நிற்பவை காலமும் பண்பாடும் ஆகும். இக் கருத்தைச் சான்று காட்டி விளக்கலாம்.

கிறிஸ்தவத் திருமறையில் கிரேக்க மொழியில் எழுதப் பெற்ற புதிய ஏற்பாட்டில் 'அவபோதகரின் அவபக்தியான வார்த்தைகள்... அரிபிளவையைப் போலப் படரும்' (IIதீமோ. 2:17) என்ற வாக்கியத்தில் இடம் பெறும் 'அரிபிளவை' எனும் நிகரனுக்குரிய மூலமொழிச்சொல் 'γαγγρενε'-gangrene என்பது. இதன் அகராதிப் பொருள் "Nec rosis usually with decomposition of a part of the body affect with Mortification". எனவே 'gangrane' என்பது சதையழுகலைக் குறிக்கிறது. ஆனால், பிளவை எனும் சொல்லின் பொருள் 'an invertbrate ulcer, a cancer, a carbuncle' என்பதாகும்.

மூலமொழிச் சொல் "அவ போதகரின் அவ பக்தியான வார்த்தைகள்... "மெல்ல மெல்ல அழிந்து போகும் நிலையைக் குறிக்கும் உருவகமாகும். இதனை, ரோம கத்தோலிக்கத் திரு

மறையில் 'அரிபிளவை' எனவும், சீர்திருத்த கிறித்தவரின் திருமறையில் 'புற்றுநோய்' (பவர் 'Bower' மொழிபெயர்ப்பு) எனவும் மொழிபெயர்த்துள்ளனர். பிளவை வேறு; புற்றுநோய் வேறு: எனினும் ஒரே மூலச் சொல்லுக்கு ஒவ்வொரு காலத்திலும் வெவ்வேறு நிகரனைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இத்தேர்வு முறையில் அடிப்படை நோக்கம் தொடர்பியல் நிகரனைத் தெரிவு செய்வதாகும்.

மூலநூலாசிரியரின் கருத்து பெறுமொழி வாசகரைச் சென்றடைவதற்குத் தடையாய் நிற்கும் காலத்தையும் பண்பாட்டையும் கடந்து தொடர்பியல் நெறியிலான நிகரனை அவ்வக் காலத்திற்கேற்பத் தெரிவு செய்துள்ளனர். முதல் மொழிபெயர்ப்பின் போது 'பிளவை நோய்' பேரழிவை ஏற்படுத்தும் நோயாக இருந்திருக்கிறது. அடுத்த மொழிபெயர்ப்புக் காலத்தில் பிளவை, தீர்க்கக் கூடிய நோயாகவும், புற்றுநோய் மெல்ல நின்று கொல்லும் நோயாகவும், சுகமாக்க இயலாததாகவும் இருந்திருக்கிறது. எனவே 'மெல்ல மெல்ல மொத்தமும் அழிந்து படும்' என்ற மூலநூற் கருத்தை உணர்த்த மொழிபெயர்ப்பாசிரியர் தம் காலத்திற்கேற்பத் தொடர்பியல் நிகரனைத் தெரிவுசெய்துள்ளார்

தொடர்பியல் நிகரன் நம்பகமான மொழிபெயர்பைத் தர உதவுகிறது; மேலும் வேறுபட்ட மொழி, இன, பண்பாடுடைய பெறுமொழி வாசகரை மூலநூலின் ஆசிரியரிடம இட்டுச் செல்கிறது.

## நிறைவுரை

மொழிபெயர்ப்பு நிகரன்களைத் திறனாய்வாளர்கள் தததம் கணணோட்டத்திற்கேற்பப் பலவாக வகைப்படுததி உள்ளனர். 'ஒரே மொழியில் கூட ஒரு சொல்லுக்கு நிகரான மற்றொரு சொல்லை காண்பதரிது' என்ற நிலையில் இரு மொழிகளுக்கிடையே நடைபெறும் செயல்முறையில் (Process) நிகரன் தேர்வில் எதிர்ப்படும் சிக்கல்கள் பலவாகும். ஆயினும், ஆர்வம், காரணமாக மொழிபெயர்ப்பில் ஈடுபட்ட மொழிபெயர்ப்பாசிரியர்கள் தத்தம் நோக்கத்திற்கு, நூலியல்பிற்கும் காலத்திற்கும் ஏற்ப நிகரன்களைத் தெரிவு செய்துள்ளனர் இவற்றுடன் வாசகர்களின் மொழியறிவும் புரிதிறனும் முக்கியப் பங்கினைப் பெறுகின்றன.

நிகரன் வகைகளும் கொள்கைகளும் சமூகச் சூழலுக்கும் திறனாய்வுப் போக்கிற்கும் ஏற்ப வளர்ச்சி பெற்றுள்ளன. மூலநூலின் ஆசிரியருக்கும் பெறுமொழி வாசகருக்குமிடையே செயல்படும் மொழிபெயர்ப்பாசிரியர் இவ்விரு அடிப்படைகளில் நிகரன்களைத் தெரிவு செய்கிறார். இவ்வகையில் பாட நிகரன், சொல்நிகரன், மொழியியல் நிகரன் போன்றன ஒரு நிலையிலும்; இயக்க நிகரன், நடை நிகரன், சொற்படிவ நிகரன் போன்றன மறுநிலையிலும் அமைகின்றன. இவ்விரு நிலைகளும் தம்முள் கலந்து வருவது (Overlapping) உண்டெனினும் இப்பாகுபாடு நிகரன்களின் வேறுபட்ட இயல்புகளைப் புலப்படுத்த உதவும்.

மொழியியலாளரின் நிகரன் வகைமைகளும், சமூக நோக்காளரின் நிகரன் வகைமைகளும் மேற்காட்டிய பாகுபாட்டினுள் அடங்கும். மொழிபெயர்ப்புத் திறனாய்வு, நிகரன் கொள்கை பற்றிய ஆய்விற்கும் மேலாக வாசகரின் ஏற்புத் தன்மையையும் (Accetability) உள்ளடக்கியதாக அமைகிறது சமூகப் பண்பாட்டு சூழலும் நிகரன் தேர்வுக்கு அடிப்படைக் காரணியாக அமைகிறது. இந்நிலையில் ஏற்புடைய நிகரனை இனங்காட்டுவது திறனாய்வாளரின் சமூகக் கடமையாகும். நிகரன் வகைகளும் கொள்கைகளும் விரிவடைந்திருப்பது மொழிபெயர்ப்புத் திறனாய்வாளரின சமூகப் பொறுப்புணர்ச்சியையும் திறனாய்வுத் துறையின் வளர்ச்சியையும் புலப்படுதததுகிறது.

## துணைநூற்பட்டியல்

1. Eugene A. Nida & Charles R. Taber, The Theory & Practice of Translation, U B S, Leiden, 1969.
2. Theodore Savory, The Art of Translation, Jonathan, Cape & Co, London, 1980.
3. Catford J.C., Linguistic theory of Translation,
4. Susan Bassnett Mc Guire, Translation Studies, Metheun & Co, London, 1980.
5. Ramanujan, A.K, Poems of Love and War, Oxford University Press, New Delhi.
6. சண்முக வேலாயுதம், மொழிபெயர்ப்பியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி சென்னை. 1985.

# மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் அவற்றிற்கான காரணங்களும்

மொழிபெயர்ப்புச் சிக்கல்களையும் முறைகளையும் ஆராய்ந்த பீட்டர் ஹாப்சன் '(வீழ்ந்த நிலையில்) மனிதன் இறைவனிடமிருந்து பெற்ற அன்புப் பரிசு மொழியாகும்'. இப் பரிசினால் தான் மனிதன் எல்லா உயிர்களிலும் மேலான வனாகவும் வேறுபட்டவனாகவும் விளங்குகிறான். மனித மொழியின் சிறப்புப்பணி இறைவழிபாடு'' என்கிறார்.[1] இறை வழிபாட்டுக்குப் பயன்பட்ட, ஒரு மொழியில் வழங்கிய இறை வணக்கச் செய்யுட்களை மற்றொரு மொழியில் பெயர்த்தளிப் பதில் பல சிக்கல்களை மொழிபெயர்ப்பாசிரியர்கள் எதிர்கொள் கின்றனர். இவண் மொழியின் பணி மாறாமலிருப்பினும் அதன் தன்மையும் மரபும் பண்பாடும் மாறியிருக்கின்றன.

மொழிபெயர்ப்புச் சிக்கல்களைத் திறனாய்வாளர்கள் பல வகைகளாகப் பகுத்துள்ளனர்[2]. மொழிபெயர்ப்பு, வரலாற்றுக்காலம், மொழிக்குடும்பம், பண்பாட்டுப் பின்னணி ஆகியவற்றுடன் தொடர்புள்ளது.[3] ஒரே மொழிக் குடும்பத் துக்குள் செய்யப்படும் மொழிபெயர்ப்பில் சிக்கல்கள் குறைவு என்பது பொதுவான நம்பிக்கை. ஆனால் இவ்வாறு வரை யறுப்பதைக் காட்டிலும், சமய பண்பாட்டுத் தொடர்புடைய மொழிகளுக்கிடையே செய்யப்படும் மொழி பெயர்ப்பில் சிக்கல்கள் குறைவு என வரையறுப்பது ஏற்புடையதாகும். ஏனெனில் மொழியியல் கூறுகளோடு கருத்துக்கூறுகள் அல்லது நம்பிக்கை, பழக்கவழக்கங்கள் போன்றன ஒத்திருத்த லால் மொழிபெயர்ப்புச் சிக்கல் குறைவாகும் வாய்ப்புகள் உள

பெரியபுராணம் எனப் போற்றப் பெறும் திருத்தொண்ட மாக்கதையை ஜி. வன்மீகநாதன் ஆங்கிலத்தில் உரையும் விடுநிலைப்பாவும் கலந்த மொழிபெயர்ப்பாக ஆக்கியுள்ளார். இம் மொழிபெயர்ப்பில் 'தோடுடைய செவியன்' என்ற செய்யுளின் ஆங்கில வடிவத்தைத் தமிழுடன் ஒப்பிட்டு ஆராய் வது இக்கட்டுரையின் செல்நெறியாக அமைகிறது. மொழி பெயர்ப்பில் ஏற்பட்டுள்ள சிக்கல்களையும் அவற்றிற்கான காரணங்களையும் இஃது ஆராய முயல்கிறது.

## மூலமும் மொழிபெயர்ப்பும்

"தோடுடைய செவியன் விடை
ஏறியோர் தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப் பொடி
பூசிஎன் உள்ளம்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முன்னைநான்
பணிந்தேத்த அருள் செய்த
பீடுடைய பிரம்மபுரம் மேவிய
பெம்மான் இவனன்றே"

Behold him
With an ear having a plug of rolled palm-leaf
pierced lobe
the Rider on the bull
the Wearer of a pure white moon on his locks
the one smeared
With the hot ashes of the cremation ground
all over his body
the Stealer of my heart
Him who is verily the Great Lord
Him who with His abode in Brahmapuram of proud fame,
bestowed grace on Brahma
seated on a multi-pelalled lotus
when he humbly adored Him
on a day long ago''

— G Vanmikanathan

**சிக்கல்கள்**

மேற்காணும் மொழிபெயர்ப்பில் ஏற்பட்டுள்ள சிக்கல்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1 புறநிலை > புதைநிலையமைப்பு மாற்றம்
(Changing the surface structure to deep stru_tu:e)
2. மொழியமைப்பு வேறுபாடு
(Difference in the Language stiucture)
3. பண்பாடும் பழக்கவழக்கமும் மாறுபடுதல்
(Cultural & Habitual Variations)
4. செய்யுள் மொழியமைப்பும் செய்யுள் நயமும்
(Poetical Language)

வாக்கியத்தின் புறநிலையமைப்பை மொழிபெயர்ப்பின் புதை நிலை அமைப்பாக மாற்றுவது முதல் வகை; இரண்டாம் வகை, தமிழ் கூட்டு நிலை (Agglutinative) மொழியாகவும், ஆங்கிலம் உள்சிதைவு (Inflexional) மொழியாகவும் இருப் பதனால் ஏற்படும் சிக்கல்; மூன்றாம் வகை, கீழைநாட்டு மண்ணும் மரபும், மேலைநாட்டுப் பண்பாடுகளிலிருந்தும் பழக்கவழக்கங்களிலிருந்தும் பெரும்பான்மையும வேறுபட் டிருப்பது; நான்காம் வகை, மூல மொழியான தமிழ் மொழியின் செய்யுள் மொழியை (Poetical Language) உருவாக்க இயலாத தால் ஏற்படும் இடர்ப்பாடுகள்.

தமிழ், சமஸ்கிருத மொழிகளின் செவ்வியல் இலக்கியங் களை ஒப்பிட்டு ஆராய்ந்த ஜி. எல். ஹார்ட், தமிழ் செய்யு ளைப் பற்றியும் தமிழ்மொழியைப் பற்றியும் கூறியிருப்பவை இவண் குறிப்பிடத்தக்கனவாகும். இவர், 'குறிப்புப் பொருளைப் பயன்படுத்துவதற்கும் மேம்படுத்துவதற்கு ஏற்ற வகையில் சிறப்பாக அமைந்திருப்தித்து தமிழ் மொழியே ஆரும்[4] எனறும், 'பண்டைய இந்தோ ஆசிய மொழிகள் இவ்வாறில்லை' என்றும், 'ஒரு தமிழ்ச்செய்யுள் ஆழங்காண முடியாத ஆறு போன்றது'[5] என்றும் [கூறியுள்ளார். இக் கருததுக்கள் தமிழிலுள்ள செய்யுள் மொழியின் செறிவையும். தெள'வையும் புலப்படுத்துகின்றன.

## புறநிலை > புதைநிலை மாற்றம்

மொழிபெயர்ப்புத் திறனாய்வாளர் நைடா மொழி பெயர்ப்பின் மூன்று செயல் முறைகளை விளக்குகிறார்.[6] அவை இலக்கணப் பகுப்பாய்வு, இடமாற்றம், மீட்டமைப்பு ஆகியன. இவற்றுள் முதல்நிலையான இலக்கணப் பகுப்பாய் வில் புற நிலை-புதைநிலை மாற்றம் இடம் பெறுகிறது மூல மொழியின் புற நிலை வாக்கியங்களை மொழிபெயர்ப் பாசிரியர் புதை நிலை வாக்கியங்களாக மாற்ற வேண்டும்.

பின்னர் இரண்டாம் நிலையில் அவற்றை மொழி மாற்றம் செய்யவேண்டும் என்பார். மூன்றாம் நிலையான மீட்டமைப்பு, பெறுமொழித் தன்மைக்கும் வாசகர்களுக்கும் ஏற்ப மொழி மாற்றம் செய்யப்பட்ட புதைநிலை வாக்கியங்களைப் புற நிலைக்கு மாற்றுகிறது.

'தோடுடைய செவியன்' செய்யுள் மொழிபெயர்ப்பில் 'பீடுடைய பிரம்மபுரம் மேவிய பெம்மான்' என்ற வரி

'Him who is verily the Great Lord
Him who with His abode in Brahmapuram of proud fame'

என ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'பெருமை மிகுந்த பிரம்மபுரத்தில் உறைபவன பெம்மான்' என அமையும். இதுவே ஆங்கிலத்தில் 'the Great Lord's abode is the Brahmapuram' என அமையும். புதை நிலையில் மேற்காணும் மூன்று சொற்களும் விரிவடைகின்றன. பெம்மான் என்பது அழுத்தமான தொனியில், (emphatic expression)

'(Him who is) verily the Great Lord

என மாறியுள்ளது. 'மேவிய' என்பது 'abode' ..னவும்' 'பீடுடைய' என்பது 'பெருமையுடைய' என்ற பொருளில்

'(Him who) with his abode (in Brahmapuram) of proud fame,

எனவும் அமைந்துள்ளது. 'பிரம்மபுரம்' ஒலிபெயர்ப்புச் செய்யப்பட்டுள்ளது. புதைநிலை வாக்கியங்கள் தெளிவானவையும் முழுமையானவையுமாகும். எனவே வாக்கியத்தை நிறைவாக்குவதற்காக 'Him who is' என்பவை சேர்க்கப் பட்டுள்ளன. is எனும் வினைச்சொல் இவ்வாக்கியங்களை முழுமையடையச் செய்கின்றது.

ஆக, செவ்வியல் தன்மையுடன் இலக்கிய நயத்துடன் செறிவாகவும் தெளிவாகவும் அமைந்த சொற்களை மட்டும் கொண்ட ஒரு செய்யுள் வரி ஆங்கிலத்தில் புதைநிலை வடி

வத்தில் பதினேழு சொற்களைக் கொண்ட இரண்டு வாக்கியங்களாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இம்மொழிபெயர்ப்புச் செயல்முறையில் நைடாவின் முதல் நிலையான இலக்கணப் பகுப்பாய்வும் (Grammatical analysis), இரண்டாம் நிலையான மொழிமாற்றமும் (Transference) அமைந்துள்ளன. மீட்டமைப்பு நிலையில் மீண்டும் புறநிலை வடிவமாக மொழி பெயர்க்க ஆசிரியரால் இயலவில்லை.

## 2. மொழிபெயர்ப்பு வேறுபாடு

கூட்டுநிலை மொழியான தமிழில் முன்னொட்டுகள் பின்னொட்டுகள் இணையும் அமைப்பு காணப்படுகிறது. ஆனால் ஆங்கிலத்தில் இந்நிலை காணப்பெறவில்லை, 'unusual, uselessness' போன்ற சில முன்னொட்டு, பின்னொட்டு முறைகள் காணப்பெற்றாலும் எதிர்மறை, சிறப்பு போன்ற சில பொருண்மைகளில் தவிர பிற எல்லா நிலைகளிலும் ஒட்டுச் சேரும் முறைகளைக் காணவியலாது. சான்றாக, 'தூ வெண்மதி' என்ற தொடரின் மொழி பெயர்ப்பைக் கூறலாம் 'சிவபெருமான் தூய வெண்மையான சந்திரனைச் சூடியிருக்கிறார்' இத்தொடர் நிலவினை விளக்கும் வருணணைத் தொடராகும். நிலவு 'மதி' எனக் குறிக்கப்பட்டுள்ளது அதன தனமைகளைத் தனித்தனிச் சொற்களால் விளக்காமல், பகுதிகள் முன்னொட்டுகளாக சேர்க்கப்பட்டுள்ளன. இச் சேர்க்கைக்கு இம் மொழியமைப்பு உதவுகிறது.

ஆங்கிலத்தில் தனித்தனிச் சொற்களாக 'தூ', 'வெண்' ஆகிய இரண்டு அடைகளும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'தூ வெண்மதி சூடி' என்ற தொடர், the wearer of a pure white moon on his lock,' என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இம் மொழிபெயர்ப்பில் 'தூ' என்பது 'pure' எனவும் 'வெண் என்பது white எனவும் அமைந்துள்ளன. 'மதி' moon எனவும் 'சூடி' 'the wearer' எனவும் அமைந்துள்ளன. இவற்றுடன மொழிபெயர்ப்பாசிரியர் மதியைச் சூடியுள்ள உறுப்பு எது?

என்ற வினாவிற்கும் ஆங்கிலத்தில் பதிலளித்துள்ளார். 'on his locks' என்று சடைமுடிகளில் மதி சூடியதனையும் இவர் விளக்கியுள்ளார். தனித்தனிச் சொற்களாகச் சேர்த்து மூல நூற்செய்தியை மொழிபெயர்த்திருப்பதனால் மூலநூற்செறிவை மொழிபெயர்ப்பில் காண இயலவில்லை, சொற்களின் தொகுதிகள் நெகிழ்ச்சிப்போக்கு உடையனவாக உள்ளன.

## 3. பண்பாடும் பழக்கவழக்கங்களும்

மொழியும் பண்பாடும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாமல் பிணைந்துள்ளன. கீழைப் பண்பாட்டுல் காதணி ஒரு முக்கியப் பங்கினைப் பெற்றுள்ளது. மேலை நாட்டுப் பண்பாட்டில் காதணி அணியும் பழக்கம் பெரும்பான்மையும் காணப்பெறவில்லை. சைவ சமயம் இறைவனை அம்மையப்பனாகக் கொண்டு வழிபடுகிறது. ஞானசம்பந்தருக்கு இறைவன் அம்மையப்பர் உருவில் காட்சியளித்ததனால் 'தோடுடைய செவி' என்ற செய்தி செய்யுளில் முதற்கண் இடம்பெற்றுள்ளது. 'தோடு' என்பது வெள்ளோலையைச் சுருட்டி அணிவது. அதனால் அதனைச் 'சுருள் தோடு' என்றும் சொல்வார்கள். மிகவும் நுட்பமான பொருளையுடைய ஓங்காரத்தைத் தகரமெய்யோடு சார்த்தி, தோடு என்ற எழுத்தை முதலில் வைத்து 'தோடு' எனத் தொடங்கினார் சம்பந்தர் என்று சேக்கிழார் கூறுகிறார்.

'எல்லையிலா மறைமுதல்மெய்யுடன் எடுத்த எழுதும்மறை
மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க் குரைசிறப்ப'

என்பது அவர் சொல்லும் விளக்கம்.

சைவ சமய அறிஞர்கள் 'தோடுடைய செவி' என்பதனை ஒரு குறிப்பாகக் கொண்டு ஞானசம்பந்தருக்கு உமையம்மை ஞானப்பால் ஊட்டியதனை உறுதிப்படுத்துவர். இத்தகு 'தோடுடைய செவி' யை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதில ஏற்படும் சிக்கல் சமயம், பண்பாடு மற்றும் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் ஏற்பட்டதாகும். 'தோடு' தமிழ்ப்பெண்கள் அணியும் காதணியாகும். இதனை, ear-ring

என மொழிபெயர்ப்பது உலோகத்தினாலான காதணியைக் குறிக்கும் 'தோடு' என்பதற்கு நிகரான சொல்லைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் ஏற்படும் சிக்கல் நீண்ட விளக்கத்தை அளிக்கக் காரணமாகவுள்ளது. ஆங்கிலத்தில்,

'plug of rolled palm leaf'

என்ற தொடர், 'தோடு' என்பது பனையோலைச் சுருள் ஆகும் என விளக்குகிறது. தமிழ்ப் பெண்மக்கள் காதுகளில் ஓலைச் சுருள் அணியும் மரபு 'தோடு' என்ற சொல்லை உருவாக்கியுள்ளது. மரபியலில் தொல்காப்பியரும் 'தோடு' இலையின் மறு பெயர் என்பதனை

'தோடே மடலே ஓலை என்றா'

(தொல். பொருள் 652)

என்ற நூற்பாவில் விளக்கியுள்ளார்.

சமயமும் பண்பாடும் கொண்டுள்ள மரபுகளைப் புலப்படுத்தும் சொற்களையும் தொடர்களையும் மொழிபெயர்ப்பதில் சிக்கல் ஏற்பட்டுள்ளது. சமயாசிரியர்கள் சைவசித்தாந்த விளக்கங்கள் அளிப்பதற்குத் தக்கச் சான்றாகத் திகழும் 'தோடு' மொழிபெயர்ப்பாசிரியர் மொழிபெயர்ப்பதற்கு இடர்ப்பாடாக உள்ளது. இதனால் மொழிபெயர்ப்பாசிரியர் விளக்கமாக மொழிபெயர்க்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இவ் விளக்கம் மூலத்திலிருக்கும் பண்பாட்டுத் தொடர்புடைய செய்தியை விரிவாகக் கூறுகிறது.

## 4. செய்யுள் மொழி

மூலமொழியான தமிழில் செறிவுக்கேற்ற தொகைநிலை வழக்குகளுக்கு இடமுண்டு. இத் தொகைநிலைத் தொடர்கள் செய்தியைச் சுருக்கமாகக் கூறி விளங்கவைக்கின்றன. எளிமையாகவும் தெளிவாகவும் கருத்துகளைப் புலப்படுத்த இவை உதவுகின்றன. ஆங்கிலத்தில் இவ் அமைப்பு இல்லை. 'உள்ளம் 'கவர் கள்வன்' எனும் தொடர் 'the stealer of (my) heart' என மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'உள்ளங் கவர்' எனும் தொடர் 'the driver is one who drives' என்பது போல 'the stealer is one who steals' என்ற அமைப்பில் உள்ளது.

மூலத்தில் காணப்பெறும் 'கவர்' என்ற சொல்லின் ஏற்புடைய நிகரனாக 'steal' அமையவில்லலை. 'களவு' 'திருட்டு' ஆகிய வற்றை 'steal' என மொழிபெயர்க்கலாம். beg borrow or steal' என்ற ஆங்கில மரபுத்தொடர் ஒரு பொருள் இல்லாதபோது அதனைப் பிச்சையெடு, கடன் வாங்கு அல்லது திருடு என விளக்குகிறது. இம்முறையில் பிறர் பொருளைக் கள்ளத்தால் கொள்வதனை 'steal' என மொழிபெயர்க்கலாம்.

'உள்ளத்தைக் கவர்தல்' என்பதில் இடம்பெறும் 'கவர்' எனும் சொல் மொழிபெயர்ப்பில் காணப்பெறவில்லை. மேலே விளக்கிய 'the stealer' 'கள்வன்' என்பதன் நேரடி மொழிபெயர்ப்பு. சிவபெருமான் வெறும் கள்வனாக இருந்தால் 'the stealer' ஏற்புடைய நிகரனாகக் கொள்ளலாம். மூலத்தில் காணப்பெறும் 'கவர் கள்வனை' ஆங்கிலத்தில் 'திருடன்' என மொழிபெயர்ப்பதனால் மூலத்தின் ஆழமும் செய்யுளின் பழமும் கிடைப்பதில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் தமிழில் கவிஞர் விளக்கும் செய்தியை மூன்று சொற்களும் பொருத்தமாகப் புலப்படுத்துகின்றன. இவை ஏற்றுள்ள தொகைநிலைத் தொடர் அமைப்பு, தன்னையறியாமல் தன் உள்ளத்தைக் கவர்ந்து சென்றவனைக் கள்வன் எனக் குறிக்க வாய்ப்பாக அமைந்துள்ளது. ஆங்கிலத்தில் கள்வனை மட்டுமே மொழிபெயர்க்கமுடிந்தது. கவர் என்பதனை ஆசிரியர் விலக்கிவிட்டார். ஆனால் மூலநூலின் அழுத்தமும் நயமும் 'கவர்' என்பதில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். கவர் கள்வனை' மூலத்தின் தொனியிலும் நயத்திலும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க இயலாமைக்கு முக்கிய காரணம், தமிழின் செய்யுள் மொழித்தன்மை ஆங்கிலத்தில் அமையாததேயாகும்.

முடிவுகள்

1. செய்யுள் மொழிபெயர்ப்பில் மொழியியல் சிக்கல்களும் பண்பாட்டுச் சிக்கல்களும் ஏற்படுகின்றன. மொழியியல் சிக்கல்கள் செய்யுளின் புறவடிவத்தைப் புதைநிலை வடிவ மாக மாற்றியமைக்கின்றன. இதனால் மொழிபெயர்ப்பில் உரைநடைத்தன்மை மிகுந்துவிடுகிறது.

2. மொழிபெயர்ப்பில் இடம் பெறும் இரு மொழிகளும் வெவ்வேறு இயல்பினவாயின் மூலத்தின் வடிவத்தையும் நயத்தையும் மொழிபெயர்ப்பில் செய்வதியலாது.

3. பண்பாடும் சமயமும் வேறுபட்டவையாயிருக்கும் சூழலில் முற்றிலும் புதிய அல்லது அயன்மைச் செய்தியொன்றினை மொழிபெயர்க்கும் போது மொழிபெயர்ப்பில் விளக்க நடை இடம்பெறுகிறது. இந் நடை, செறிவையும் சுவை யையும் பாதிக்கிறது.

4. இலக்கண அமைப்பும் புலப்பாட்டுத் திறனும் செய்யுள் மொழியைச் சிறப்படையச் செய்கின்றன. இவற்றில் ஏற்படும் சிக்கல்கள் தவிர்க்க முடியாதவையாகும்.

*ஒக்குதமிழ், 15, ஜனவரி, 1992*

## அடிக்குறிப்புகள்

1. Peter Hobson, Philosophy, Literature and Fine Arts, p.71
2. Chandrasekher Patil, Literary Translation, p. 170.
3. Peter Hobson, p. 77.
4. G. L. Hart, The Poems of Ancient Tamil, p. 27.
5. Ibid, p. 27,
6. Eugene Nida, Language, Structure, and Translation, p. 88

# மொழிபெயர்ப்பில் குறைகள்

மொழிபெயர்ப்பில் காணப்பெறும் குறைகளை (errors) ஜுவென் சாகர் எனுமறிஞர் நான்காக வகைப்படுத்துவார். அவை வருமாறு: 1. மூலநூற்கருத்தைத் தலைகீழாக மாற்றுதல் 2. உள்ளன நீக்கலும் இல்லன சேர்த்தலும் 3. கருத்தைத் திசை திருப்புதல்; 4 ஏற்ப மாற்றுதல் (modification).[1] இவை நான்கும் மொழிபெயர்ப்பில் இடம்பெறும்போது குறைகளாகத் திறனாய்வாளர்களால் கருதப்படுகின்றன.

இவை குறைகளாகக் கருதுவதற்கு வாய்ப்பாக அமையும் நிலைகளை இக்கட்டுரை தமிழிலக்கியச் செய்யுள் மொழிபெயர்ப்புகளிலிருந்து சான்று காட்டி விளக்குகிறது.

## 1. மூலநூற் கருத்தை மாற்றுதல்

(Inversion of Meaning)

மூலநூற்கருத்தைப் பெறுமொழியில் மொழிபெயரக்கும் போது மூலநூலாசிரியர் கருதாதவகையில் முற்றிலும் வேறாக, முரணான கருத்தை அளிப்பது ஒரு வகைக் குறையாகும். இக் குறையினால் மொழிபெயர்ப்பு வாசகர் தவறான கருத்தைப் பெறுவது மட்டுமின்றி மூலநூலாசிரியர் பற்றியும் வேறுபட்ட கணிப்பைப் பெறுவார். சான்றாக,

கவிமணியின் 'உமார் கய்யாம் பாடல்களில்' உலக இன்பங்களைத் துய்க்காத வாழ்க்கை வெற்று வாழ்க்கை எனக் கூறப்பட்டுள்ளது. தமிழ் வாசகர் பலரும் இந்நூல் எபிகியூரியத் தத்துவத்தைப் போதிப்பதாகக் கருதுகின்றனர். உலகின் துன்பங்களை மறக்கத் துணையாக அமைவது மதுக் கலசமே என்ற கருத்தில் பல பாடல்கள் மொழிபெயர்ப்பில் இடம்பெற்றுள்ளன.

"உருக்கும் பாடல் கேளாமல்
உண்ணும் மதுவும் உண்ணாமல்
பொருக்கும் மண்ணில் மண்ணாகப்
புதைந்து போனால் என்செய்வோம்"

(பாடல் 67)

என்றும்,

வாழ்வின் கிண்ண மது
  வற்றி வறண்டு போகும் முன்னம்
பருக மதுவைத் தாரீரோ?
  பாய்விட் டெழுந்து வாரீரோ?
அருமை மங்கை மாரே''

(பாடல் 77)

என்றும் பாடல்கள் அமைந்துள்ளன. மதுவின்பமும் மங்கையர் இன்பமும் பற்றி இம்மொழிபெயர்ப்பில் பல பாடல்கள் காணப்படுகின்றன. ஆனால் பாரசீகக்கவி மதுவைத் திராட்சை ரசமாக 'Wine' என்று குறிப்பிட்டு உள்ளார். இத் திராட்சை ரசம் இறையன்பைக் குறிக்கும் பொருளில் மூலநூலில் வழங்கி) யுள்ளது; மேலும் இறைமையைப் பெண்ணாக உருவகித் துள்ளது. இபுன் ஏல் அரபி என்பவர் இவ் உருவகத்தை அளவுக்கதிகமாகக் கையாண்டதனால் தெய்வ நிந்தனைக் குற்றத்திற்கு ஆளானார் என்பதும் இவண் குறிப்பிடத்தக்கது.[2] ஆங்கிலத்தில் 'The Absolute Grape' என்று திராட்சை ரசம் பற்றிய செய்தி இறைவனோடு ஒப்பிட்டுணரும் வகையில் புலப்படுத்தப்பட்டுள்ளது. தமிழில் இப்பொருள் முற்றிலுமாக மாற்றப்பட்டுள்ளது.

பெண்ணே கிண்ணம் நிறையம்மா' (71)
'வண்ணக் கிளியே! ஒரு கிண்ணம்
  மதுவை ஊற்றித் தருவாயே' (72)

எனப் பெண்ணாகவும் மதுவாகவும் இக்கருத்துகள் நேர் பொருளுடையனவாக உள்ளன. மூலநூலின் குறியீட்டுப் பொருள் மொழிபெயர்ப்பில் முற்றிலுமாக அல்லது தலைகீழாக மாற்றப்பட்டுள்ளது.

## 2.0 உள்ளன நீக்கலும் இல்லன சேர்த்தலும்

மூலநூல் பனுவலில் உள்ளவற்றை மொழிபெயர்ப்பில் நீக்கி விடுவதும் (deletion) இல்லாதவற்றைச் சேர்த்துக்கொள் வதும் குறைகளாகக் கருதப்படும். ஏனெனில் மொழிபெயர்ப் பாசிரியர் மூலநூலாசிரியரின் படைப்பினை மொழிபெயர்க் கிறாரேயன்றி புதிதாக ஒரு நூலைப் படைக்கவில்லை. மேலும்

மொழிபெயர்ப்பில் காணப்பெறும் கருத்தலகுகள் மூலநூலாசிரியரின் கருத்துக்களாகவே நம்பப்படுவதனாலும் மேற்கூறிய குறை மொழிபெயர்ப்பில் இடம் பெறுதல் கூடாது. பெறுமொழிப் பண்பாடு,மரபு, பழக்கவழக்கங்கள் போன்றவற்றிற்கு முரணாகக் காணப்பெறும் மூலமொழிக் கருத்துகளை மொழிபெயர்ப்பாசிரியர் நீக்கி விடுகின்றார். இதற்கு முக்கிய காரணம், இவை பெறுமொழி வாசகர் மனத்தில், மூலநூலாசிரியரின் கருத்திற்கு முரணான கருத்தை உருவாக்குவதேயாகும். ஏ.வி. சுப்பிரமணியன்.

> "உள்ளூர்த் தன்மையுடைய கருத்துகள் இடம்.
> பெற்றிருந்த பல அழகிய பகுதிகளைப்
> பெறுமொழியில் படிப்பவருக்கு வேடிக்கையாகத்
> தோன்றுமென்பதால் நீக்க வேண்டியதாயிற்று"

என்று குறிப்பிட்டுள்ளார்[3] இங்ஙனம் கருத்து முரண் ஏற்படும் சூழல்களில் மட்டுமின்றி வேறு காரணங்களாக மூலநூற் செய்திகளை நீக்குதல் ஏற்புடையதன்று. அடிக்குறிப்புகளின் உதவியால், பெறுமொழி வாசகருக்கு அயன்மையான, முரண்பட்ட செய்திகளை விளக்குவது பயனுடையதாகும். இதன் மூலம் பெறுமொழி வாசகர் மூலமொழிப் பண்பாடு மற்றும் பழக்கவழக்கங்களை அறிந்து கொள்வர்.

உள்ளன நீக்கல் குறையை மூன்றாக வகைப்படுத்தலாம் அவை வருமாறு :

1. கோட்பாட்டுக் கருத்துகளை நீக்குதல்
2. கலைநயக் கூறுகளை நீக்குதல்
3. பண்பாட்டுத் தகவல்களை நீக்குதல்

## 2.1. கோட்பாட்டுக் கருத்துகளை நீக்குதல்

கோட்பாடுகள் ஒரு நாட்டின், மொழியின், இனத்தின் வாழ்வியல் கொள்கை சார்ந்த விளக்கங்களாகும். இவற்றை மொழிபெயர்ப்பில் நீங்குவிடும்போது மூல நூலாசிரியர் வாசகருக்குத் தெரிவிக்க விரும்பிய கருத்துகளை மொழிபெயர்ப்பாசிரியர் மறைத்து விடுகிறார். இதனால் மூலநூலாசிரியரின் நோக்கம் பெறுமொழி வாசகருக்குத் தெரிவிக்காமல் மறைக்

கப்படுகிறது. கவிமணியின் 'உமார் கய்யாம் பாடல்களில் இருந்து சான்று காட்டி இக்கருத்தை விளக்கலாம். இறையனுபவத்தில் மூழ்கியிருக்கும் பரவசநிலையைத் தனிநிலை அல்லது ஏகாந்த நிலையாக உமார் கருதியுள்ளார். இக் கருத்தை ஃபிட்ஸெரால்டு.

'The thoughtful soul to solitude retires'

எனக் குறிப்பிட்டுள்ளார். வேறொரு பாடலிலும் இத் தனிநிலையைப் பற்றி

"... ..singing in the Wilderness
And Wilderness is paradise enow"

எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் இங்குக் குறிப்பிடுள்ள 'தனிநலை' ஒருவகை சமயக் கோட்பாடாகும். உலக வாழ்வில் நிறைவுபெற்ற பின் புறவுலகினின்று பிரிந்து ஆன்மா தனிநிலை அடைவதனை 'Wi'derness' அல்லது 'Solitude' என்ற சொல் குறிக்கிறது பாரசீக, எகிப்திய, யூத சமயங்கள் இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கததால் தனியாய் நின்று ஏங்கி அழுவதனை 'crying in Wilderness' என்று குறிப்பிடுகின்றன[4] இக் கருத்தினைக் கவிமணி தம் மொழிபெயர்ப்பில் நீக்கி விட்டார். தனிநிலைக் கோட்பாடு எகிப்தியப் பழஞ்சமயங்களின் கோட்பாடாக விளங்குகிறது[5]. இதனைப் பெறுமொழி வாசகர் அறிய இயலாதவாறு மொழிபெயர்ப்பில் இக் கருத்து நீக்கப்பட்டுள்ளது

## 2.2. கலைநயக் கூறுகளை நீக்குதல்

செய்யுள் மொழிபெயர்ப்பில் உவமை, உருவகம், சிலேடை, சந்தம் போன்றவை நீக்கப்படுவதுண்டு. இதற்குக் காரணம், இக் கலைநயக் கூறுகளைப் பெறுமொழியில் படைத்தளிப்பது சிக்கலான பணியாக உள்ளது. மேலும், அவ்வாறு படைததளிக்கப் பெற்றாலும் அவை மூலநூலைப் போன்ற விளைதிறன் கொண்டவையாக இருப்பதுமில்லை. கலைநயக் கூறுகள் மூலக்கருத்தினுக்கு அரண் சேர்ப்பவையாக இருக்கும் நிலைகளில் அவற்றை நீக்குவது தவறாகும்.

சான்றாக, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற சங்கப் பாடலில்

''நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம்'' புறம்.192

என்ற உவமை இடம்பெற்றுள்ளது. இப்பாடலை மொழி பெயர்த்த ஜி.யூ. போப்.

'the raft goes on as fates ordain'

என மேற்காணும் உவமையை மொழிபெயர்த்துள்ளார். நீர் முறை, புணை-உயிர் என்பன நீர்வழிச் செல்லும் புணை போல விதி வழியே உயிர் செல்லும் என்ற கருத்தினைத் தெரிவிக்கின்றன. ஆனால் மொழிபெயர்ப்பாசிரியர் 'விதி வழியே புணை செல்லும்' என்ற பொருளில் 'the raft goes on as fates ordain' எனக் கூறியிருக்கிறார். இக் கூற்றில் மூலமொழியின் உவமையழகைக் காண இயலாது, மூலநூற்கருத்தும் புலப்படவில்லை. மூலநூலின் 'நீர்வழிப் படூஉம் புணைபோல்' என்ற உவமை மொழிபெயர்ப்பில் இடம் பெறவில்லை; உவமை கூறும் கருத்தும் தெளிவாகப் புலப்படுத்தப்படவில்லை.

## 2.3 பண்பாட்டுத் தகவலை நீக்குதல்

ஒரு பாடம் அல்லது பனுவல் அம் மொழி பேசும் மக்களால் பண்பாடு பற்றிய தகவல்களையும் தன்னுள் கொண்டுள்ளது. பழந்தமிழகத்தில் மக்கள் நிலம் சார்ந்த பண்பாடு உடையவராக விளங்கினர் என்பதை ஆற்றுப்படை நூல்கள் புலப்படுத்துகினறன. முல்லை நிலப் பெண்ணொருத்தி நெய்யை விற்ற பணத்தில் பொன் வாங்க மாட்டாள். அவளுடைய நிலததில் செல்வமாகப் போற்றப் பெறும் எருமைக்கன்றினையே] வாங்குவாள். அருணையப்பன் மொழிபெயர்ப்பில் அவள் பசும்பொன் கொள்ளாள், எனும் செய்தி விலக்கப்பட்டுள்ளது.

'நெய்விலை கூட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்'

என்ற வரிகளை

'.........selling butter
She buys cows and buffaloes'

என்ற மொழி பெயர்ப்பில் முல்லை நிலத்தில் 'பொன்னுக்கு மதிப்பில்லை' என்ற பண்பாட்டுத் தகவல் விலக்கப்பட்டுள்ளது.

இத்தகவல் முல்லை நிலத்தின் சமூக மதிப்புகளுள் ஒன்றினைப் புலப்படுத்துகிறது. இத்தகைய பண்பாட்டுத் தகவலை நீக்குவது மொழிபெயர்ப்பில் காணப்படும் முறையாகவே கருதப்பெறும்.

## இல்லன சேர்த்தல் (Addition)

மூலநூலில் இல்லாத தகவல்களையும் சூழல்களையும் நிகழ்ச்சிகளையும் மொழிபெயர்ப்பாசிரியர்கள் சேர்ப்பதுண்டு. மூலநூற்கருத்துக்கு முரணான அல்லது தேவையற்ற தகவல்களை மொழிபெயர்ப்பில் சேர்த்துக் கொள்வது ஒரு குறையாகும். நைடா இதனைப் பற்றிக் கூறும்போது 'மூலபாடம் குறித்த அளவுக்கதிகமான அறிவு காரணமாக' (too much knowedge of the subject matter) இக்குறை ஏற்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார். இக்குறை, பெரும்பாலும் மூலமொழியாளர் தம் மொழிப் பனுவலைப் பிறமொழியில் மொழிபெயர்க்கும்போது ஏற்படுகிறது.

ஏ.வி. சுப்பிரமணியன் சங்கப்பாடல்கள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இவற்றில் சில மேற்காணும் 'இல்லன சேர்ததல்' முறையில் காணப்படுகின்றன. சான்றாக,

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாமகலந் தனவே"

என்ற பாடலை

"We shall not my love, be ever parted!
In this bower we came together
Through god's decree, on a fated day
Your parents your kinsmen are total strangers
To mine; and we met as strangers, too.

We came together, not withstanding
And merged, like these drops of rain coming down
On the loose red earth of the mountain side
Making a whole, where the elements
Yield up their different indentities
And merge in harmony, interacting
Grain upon grain, atom on tiny atom
So fused together they cannot he
Extricated or torn apart
Like the spirit of the earth and the spirit of the raindrops
Our souls have fused at fates bidding
And shall not, dearest, be parted, ever.

எனப் பதினேழு அடிகளில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இம்மொழிபெயர்ப்பில் மூலபாடலில் காணப்பெறாத செய்திகள் பல புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளன. அவை வருமாறு:

—கடவுளின் ஆணையால், விதிக்கப்பட்ட நாளில்
நாம் இச் சோலையில் இணைந்தோம்;
—நம்மை எவரும் பிரிக்கவியலாது;
—மூலகங்கள் தம் தனித்தன்மையை இழந்து
ஒன்றாக இணைவது போல் இணைந்தோம்.
—அணுஅணுவோடும், நெல்மணிநெல் மணியோடும் சேர்வது
போல பிரிக்கவியலாத வகையில் ஒருவருக்குள்
ஒருவர் இசைவாகக் கலந்துவிட்டோம்.
—ஊழின் அழைப்பால் நம் ஆத்மா உயிர்கள்
நிலத்தின் உயிர்ப்புடன் மழைத்துளியின் உயிர்
கலந்தது போல நாமும் கலந்துவிட்டோம்.
—இனி நாம் பிரியமாட்டோம்.

மூலபாடலில் காணப்பெறும் கருத்தலகுகள் பின்வரும் வரிகளில் மட்டுமே இடம்பெற்றுள்ளன:

'Your parents, your kinsmen are total strangers
To mine, and we met as strangers too,
We came together, not withstanding
And merged, like these drops of rain coming down
On the loose red earth of the mountain side"

இவ் வரிகள் தவிர இவற்றிற்கு முன்னும் பின்னும் இருப்பவை மூலத்தில் காணப்பெறாதவை. அவை மூலமொழி உரையாசிரியரின் விளக்கங்களையும் பொருளதிகார உரையின் விளக்கங்ளையும் கொண்டுள்ளன. கூடுதல் கருத்துகள் மொழிபெயர்ப்பின் புரிதிறனுக்கு உதவியாக அமையுமானால் அவற்றைத் துணைக் குறிப்புகளாக அளித்துப் பெறுமொழி வாசகருக்கு உதவலாம். அவ்வாறின்றி, மொழிபெயர்ப்பினுள் மூல நூலாசிரியரின் கருத்துப்புலப்பாட்டு வரிசையில், இவ்விளக்கங்களைச் சேர்ப்பது அறமாகாது. இம்முறை மொழிபெயர்ப்பின் நம்பகத்தன்மையைப் பெரிதும் பாதிக்கிறது.

மூலநூற் தகவலினை மொழிபெயர்க்கும் போது நிகழ்ச்சிக்கான சூழலை, பின்னணியைப் பெறுமொழியில் உணர்த்துவதோடு சிலர் தம் கருத்து விளக்கங்களையும் மொழிபெயர்ப்பில் சேர்த்து விடுவதுண்டு. சான்றாக,

'ஆளன்றன்று வாளின் தப்பார்'

என்ற புறநானூற்று அடியை மொழிபெயர்த்த ஆசிரியர்

'to give the child
a warrior's death'

என்ற காரணத்தையும் விளக்கியுள்ளார். இக்காரணம் மூல நூலுள் காணப்பெறாத புதிய சேர்க்கையாகும்.

மூலமொழியாளர் தம் மொழி நூலைப் பிறமொழியில் மொழிபெயர்க்கும்போது கருத்துப் பொருளை உணர்த்துதற்கு என விளக்கமான மொழிபெயர்ப்பைத் தருவதுண்டு. சான்றாக 'யாரு மில்லைத் தானே கள்வன்' எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாடலை மொழிபெயர்த்த சண்முகம்பிள்ளை, லடென் குழுவினர் இப்பாடலில் இடம்பெற்றுள்ள 'தானது பொய்ப்பின்' என்ற தொடரை

'if his promises are lies'

என மொழிபெயர்த்துள்ளனர். 'promises' என்ற நிகரனுக்கான மூலமொழிச்சொல் எதுவும் காணப்பெறவில்லை. பிற மொழி பெயர்ப்பாசிரியர்கள் இத் தொடரை

'if he should lie' (ஏ.கே. இராமானுஜன)
'if he lies' (ஜி.எல. ஹார்ட்)
'if he leaves me' (அண்ணாமலை & ஷிஃப்மன்)
'if he be false' (சி.ஹெச். ஜேசுதாசன்)
'if he denies' (கமில் சுவலபில்)
'if he lies' (பன்னீர் செல்வம்)

என்று மொழிபெயர்த்துள்ளனர். இவர்களில் எவரும் 'சூள்' பற்றிக் குறிப்பிடவில்லை. 'தானுற்ற சூள் பேணான், பொய்த் தான்' (கலி 41:19-20) என்ற கலித்தொகை வரி மொழிபெயர்ப் பாசிரியரிடம் 'promises' என்ற கருததினைச் சேர்ப்பதற்குத் தாக்கமாக இருந்திருக்கலாம

மூலநூற்பாட அறிவும் உரைகளின் தாக்கமும் மேற் குறிப்பிட்ட சான்றுகளில மூலநூலில் காணப்படாத செய்தி களைச் சேர்ப்பதற்குக் காரணங்களாக அமைவதனை இதனால் உணரலாம்.

## கருத்து விலகல் (Deviation)

மூலநூற்கருத்தை மொழிபெயர்க்கும்போது அதன் மையக் கருத்தினின்று விலகி அமைவதைத் திறனாய்வாளர்கள் தவறு எனக் கருதுகின்றனர். இக் கருத்து விலகலினால் மூலநூற் செய்தி மிகச்சரியாகப் பெறுமொழி வாசகரைச் சென்றடைவ தில்லை. மேலும் இக் கருத்து விலகல் மொழிபெயர்ப்பின் துல்லியத்தன்மையையும் பாதிக்கிறது.

தமிழிலக்கியம் காட்டும் குறிஞ்சித்திணையைச் சார்ந்த 'குறத்தி'யை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும்போது 'Gypsy' என மொழிபெயர்க்கின்றனர். ஆங்கில மொழியில் வழங்கும் 'gypsy' ஒரு நாடோடி. ஆனால் தமிழில் குறத்திக்கெனத் தனி நிலம் உண்டு. அவள் நாடோடியில்லை. gypsy, குறத்தி இரு

வரின் வாழ்க்கை முறைகளும் பழக்கவழக்கங்களும் வெவ் வேறாக இருக்க gypsy யை குறத்திக்கு நிகரனாக அமைப்பது சொல்லளவில் சரியாக இருப்பது போலத் தோன்றும்; எனினும் கருத்தளவில் 'gypsy' எனும் நிகரன் மூலநூற்கருத்தினைப் புலப்படுத்தும் நெருங்கிய நிகரனாக அமையவில்லை. தமிழிலக்கியக் கருத்தினின்று விலகி மாறுபட்ட கருத்தை மொழி பெயர்ப்பு நிகரன் புலப்படுத்துகிறது. நிலம் சார்ந்த பெயரை, இனம் சார்ந்த பெயராக மொழிபெயர்ப்பதால் இங்கே கருத்து விலகல் ஏற்பட்டுள்ளது.

## ஏற்ப மாற்றுதல் (Modification)

ஒரு பனுவலை மொழிபெயர்க்கும்போது சிற்சில மாற் றங்களைச் செய்து மூலமொழிச் செய்தியைப் பெறுமொழிக்கு ஏற்ப அமைப்பதனையும் ஜவென் சாகர் மொழிபெயர்ப்புக குறைகளுள் ஒன்றெனக் கருதுகினறார். இம்மாற்றங்கள் குறிப் பிட்ட நோக்கமும் பயனும் கொணடனவாயிருக்கும். இவற்றால் மூலநூலாசிரியரின் படைப்பு நோக்கம், நுவல்பொருள் ஆகியன பெறுமொழி வாசகரைச் சென்றடையுமானால் இவை ஏற் புடையன என்றும், முரண்பட்ட கருததை உருவாக்குமானால தவறானவை என்றும் திறனாய்வாளர் கருதுவர்.

கிறிஸ்தவக் காப்பியமான 'இரட்சணிய யாத்திரிகம்' ஜான் பனியனின் 'The Pilgrims Progress' என்பதன் மொழி பெயர்ப்பாகும். இக் காவியத்தில் பல சூழலகள், பெயர்கள், வருணனைகள் ஆகியன பெறுமொழிக்கேற்ப மாற்றியமைக் கப்பட்டுள்ளன. பெயர்களும் பெறுமொழி வழக்கிற்கேற்ப சூசை' என்றும் 'மரியாள்' என்றும் மாற்றப்பட்டுள்ளன. மற் றொரு காப்பியமான தேம்பாவணியில் பிறமொழிப்பெயர் களான 'ஜான்' (அருள் பெற்றவன்) என்பதனை 'கருணையன் என்றும் ஜோசப் என்பதனை 'வளன்' என்றும் பெறு மொழி நிகரனாக வீரமாமுனிவர் மாற்றியுள்ளார். ஆனால் பெறுமொழித் தன்மைக்கேற்ப மாற்றுவதாகக் கருதி 'ருஸ்தம்' எனும் பாரசீக ஹெர்குலிஸை 'வீமன்' என்றும் ஹத்தீம் தாய் எனும் வள்ளலை 'கர்ணன்' என்றும் மாற்றியமைப்பது இவர் களின் ஆளுமையையும் இணைவையும் முரண்படப் புலப் படுத்திவிடும். இம்முறை முற்றிலுமாக மாற்றியமைப்பதை த்ததாகும்.

**முடிவுரை :**

திறனாய்வாளர்கள் வகைப்படுத்திய குறைகளை இக் கட்டுரை விளக்கியிருந்தாலும் இவற்றில் சில பெறுமொழிப் பண்பாடு, மரபு, மொழிபெயர்க்கப்படும் காலச் சூழல் ஆகிய வற்றிற்கேற்பத் திறனாய்வாளரால் சரியென ஏற்றுக்கொள்ளப் படுவதும் உண்டு. 'life gifts' என்ற தொடரை ஒரு பழங் குடி மக்களின் மொழியில் 'உயிருள்ள பரிசுகள்' என மொழி பெயர்த்த போது பெறுமொழி வாசகர் அவர்களின மரபுப்படி அப் பரிசுகளைக் 'கோழிக்குஞ்சுகள்' எனக் கருதினர் என்பது நைடாவின் கருத்து.[6] இவ்வாறு தவறாகப் பொருள் கொள்ளும் சூழல் காணப்படும் நிலையில் 'மாற்றியமைத்தல்' 'முறையைச்' சரியெனக் கொள்ள வேண்டும்.

''மணணொடுங் கொண்டு போனான் என்
புண்ணிய மேனி தீணட அஞ்சுவான்''

எனச் சீதை கம்பராமாயணத்தில் கூறும் விதமாகக் கம்பர் புதிய சூழலை ஏற்படுத்தி இராவணன் சீதையைக் குடிலோடு எடுத்துச் சென்றதாக அமைத்திருந்தார். இங்ஙனம் மூலத்தில் இல்லாதவற்றைப் புதிதாக சேர்த்ததற்குப் பெறுமொழிப் பண் பாடு முக்கியக் காரணமாயிற்று. இச்சேர்க்கையால் மூலநூலா சிரியரின் நோக்கம் எதுவும் மொழிபெயர்ப்பில் மாறிவிட வில்லை.

ஆனால் மூலநூற்கருத்தை முற்றிலுமாகப் பிறழ உணர வாய்ப்பளித்தலும், கருத்து விலகலும் சரியெனக் கொள்வதற்கு இடமில்லை. இவை மூலநூலாசிரியரின் படைப்பு நோக்கத்தைச் சிதறடித்துவிடும்; மொழி பெயர்ப்பின் நம்பகத்தன்மையைச் சிதைத்துவிடும். எனவே இத்தவறுகள் இடம்பெறாத வகையில் ஒரு மொழிபெயர்ப்பை அமைப்பது தான் பயன் உடையதாகும்.

## அடிக்குறிப்புகள்

1. Catriona Picken (Edr.) The Translator's Hand Book, p.96.
2. Reynold A. Nicholsen, The Mystics of Islam. p.117.
3. Subramanian A.V., The Squirrel in the Courtyard, Intrdn
4. Seyyed Hossein Nasr, Sufi essays, p. 29
5. Subramanian A.V. op. cit. p. 32
6. Nida E. (Edr.), The Bible Translator (Techninal papers), Vol. 42, No. 2A, p.14.

# மொழிபெயர்ப்பு உத்திகள்

தாகூருக்குப் பின் ஞானத்தைத் தெளிவாக விளக்கிய கீழை நாட்டுத் தத்துவ இயலாளர் கலீல் கிப்ரான் ஆவார். இவர் இலெபனான் நாட்டினர். இவருடைய தெளிந்த ஞான நூலான 'கண்ணீரும் புன்னகையும் (Tears aud laughtar) தமிழில் அ. மா. சகதீசன் என்பவரால் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. 'பக்தியின் மொழி தமிழ்' என்று பாராட்டுப் பெற்ற தமிழ் மொழியில் கலீல் கிப்ரானின் ஞானத் தத்துவங் களைப் பெயர்த்தளிக்க பல உத்திமுறைகளை மொழி பெயர்ப் பாளர் கையாண்டுள்ளனர். இவ் உத்திகள் தொடர்பியல் அணுகுமுறையைச் (Communicative approach) சார்ந்தன. ஒருவர் மற்றொருவரிடம் ஒரு கருத்தைத் தெரிவிக்கும்போது அக்கருத்துத் தெளிவாகப் புரிவதற்குச் சில உத்திகளைக் கையாள்வது மரபு. அங்ஙனமாக அ.மா. சகதீசனும் பின்வரும் உத்திகளைக் கையாண்டுள்ளார்:

1. அடைமொழிகள் சேர்த்தல்
   (Addition of adjectival and adverbial forms)
2. விளக்கிக் கூறுதல் (Explanation)
3. திரும்பக் கூறுதல்
   (Repeating the shades of meaning through another equivalent successively)

இவற்றை ஒவ்வொன்றாகச் சான்றுகளுடன் விளக்குவது இக் கட்டுரையின் நோக்கமாகும்.

சேர்த்தலும் விலக்கலும் மொழிபெயர்ப்பில் அறனில் செய்கைகளாகக் கருதப்பெறுவன. எனினும், மூலநூல் கருத்தில் மாற்றம் ஏற்படுத்தாமல், அக் கருத்தினைப் புலப்படுத்தும் சொல் வடிவங்களில் சேர்த்தலும், விளக்கமும் கொள்வதில் தடையேதும் இல்லை.

**1. அடைமொழிகள் சேர்த்தல்**

பெயர்ச் சொற்களை மொழிபெயர்க்கும்போது அவற்றிற்குரிய நிகரன்கள் எளிதில் கிடைத்துவிடும் வாய்ப்பு ஏற்படுமானால், அவ்வேளை மொழிபெயர்ப்பாசியர் மூலநூலில் கருத்தினை இம்மொழிபெயர்ப்பு நிகரன் சரியாகப் புலப்

படுத்துமா என ஐயுறுகிறார், அல்லது தடுமாறுகிறார். இத்தடு மாற்றத்தின் விளைவாக மொழிபெயர்ப்புச் சொல்லுக்கு ஓர் அடைமொழியைச் சேர்க்கிறார்: இவ் அடைமொழி மூலநூற் கருத்தினை அழுத்தமாகவும் தெளிவாகவும் புலப்படுத்த உதவுவதாகக் கருதுகிறார் மொழிபெயர்ப்பில் அடைமொழிப் பயன்பாட்டிற்கான அடிப்படைக் காரணமாக நாம் இதனைக் கொள்ளலாம். இப் பயன்பாட்டில் மூலநூல் வாசகர் பெற்ற மனஉணர்வை மொழிபெயர்ப்பு வாசகரும் பெற உதவுகிறது' என்பது மொழிபெயர்ப்பாசிரியரின் நம்பிக்கை.

'I am the lover's *gift*'—நான காதலர்களின் அன்புப் பரிசு
'I am the wedding *wreath*' —மணமக்களின மங்கல மாலை
'I am a part of *joy*' —நானே இன்பததின் பெரும் பங்கு
But I look up high to—நான பேரொளியைக் காணத்தான்
see ony lthe *light* விண்ணை அண்ணாந்து நோக்குவோன்
—Song of the flower —பூவோ பூ.ப. 72

## 2. விளக்கிக் கூறுதல்

மொழிபெயர்ப்பாசிரியர் தமிழ் வாசகரின் புரிதிறனை மனத்திற்கொண்டு விளக்கிக் கூறுதல உத்திமுறையைக் கையாண்டுள்ளார். அடைமொழிப் பயன்பாட்டிற்கு அடுத்த நிலையாக இவ் விளக்கியுரைக்கும் உததிமுறை அமைகிறது அடைமொழியால் மூலநூல் கருத்தைத தெளிவாகவும் முழுமையாகவும் விளக்க இயலா நிலையில் கூடுதல் விளக்கம் அளிக்க வேண்டியதன் கடடாயததை மொழி பெயர்ப்பாசிரியர் உணர்கிறார். எனவே மூலநூற் சொல்லைவிளக்கமாக மொழிபெயர்த்துள்ளார். சான்றாக.

'I suffer, I have
exhausted my life following you.'
—(Have mercy on me, my soul)

என்ற வரியில் இடம்பெறும் 'exhausted' என்ற சொல்லை,

''தேய்ந்து, நைந்து, அழுகும் உடலைப் பார்''
—(ஆவித்துணையே கருணை காட்டு. ப 92)

என்று மொழிபெயர்ததுள்ளார். 'தேய்ந்து, நைந்து. அழுகும்

உடல்' என்ற விளக்கம் பல அடைகளைக் கொண்டு அமைந்துள்ளது.

'விளக்கிக் கூறுதல்' என்னும் இவ்உத்தி, மூலநூலில் காணப்படும் சொல்லையும் பொருளையும் மொழிபெயர்த்த பின்னும், அம்மொழிபெயர்ப்புக்கும் மேலாக வேறு சில சொற்களையும் அமைத்துள்ளது. சான்றாக,

'look upon me, my soul'
—(Have mercy on me, my soul)

என்பதனை,

'என் ஆத்மாவே! உற்றுநோக்கு யோசித்துப் பார்'
--(ஆவித்துணையே, கருணை காட்டு, ப. 91)

என்று மொழிபெயர்த்திருப்பதில் 'யோசித்துப் பார்' என்ற தொடர் விளக்கத் தொடராகவே அமைந்துள்ளது மூல நூலில் இதற்குரிய சொல் காணப்பெறவில்லை

'This, my soul, is agonizing torture.
— (Have mercy on me My Soul)

என்ற ஆங்கிலத் தொடரைத் தமிழில் மொழிபெயர்ப்பாசிரியர்,

'ஆன்மாவே! இது பொறுக்க முடியாத வேதனை!
பெரும் சித்திரவதை! உயிர்க்கொலை' (ப.91)

என விளக்கியுள்ளார் 'வேதனைப்படுத்தும் சித்திரவதை' என்பது மூலத்தின் சரியான மொழிபெயர்ப்பு. ஆனால் இத்தொடரைப் பிரித்து 'வேதனை,யையும 'சித்திரவதை,யையும் தனித்தனியாக அடைகளோடு விளக்கியுள்ளார். இவையும் போதாவென்று 'உயிர்க்கொலை' என்பதனையும் சேர்த்துள்ளார். இவ்விளக்கத்தில் மொழிபெயர்ப்பாசிரியர் தம் கருத்து எதனையும் புதிதாகச் சேர்க்கவில்லை. மூலநூற் கருத்தை விளக்கமாக மொழிபெயர்த்துள்ளார்.

விளக்கமாக உரைக்கும் உத்தியைப் பயன்படுத்தும் போது அ. மா. சகதீசன் குறிப்பிடத்தக்க ஒருவழி முறையைப் பின்பற்றுகிறார். ஒரு பாடற் பகுதியினை மொழிபெயர்க்கும் போது அப்

பகுதி உணர்த்தும் கருத்தைச் செவ்வனே புலப்படுத்த விரும்பி அக்கருத்தின் சாரத்தை அப்பகுதியின் முதலிலாவது இறுதியிலாவது ஓரிரு வரிகளில் எடுத்துரைக்கிறார். இத்தகைய, சாரம் உணர்த்தும் பாங்கு மூலநூல் கருத்தைக் காட்டிலும் மிகையாக ஒரு கருத்தை உரைப்பதாகாது. மாறாக அக் கருத்தினை முழுமையாகவும் தெளிவாகவும் புரிந்துகொள்ள இவ்வழிமுறை உதவுகிறது எனலாம். ஏனெனில் முதலிலோ இறுதியிலோ அமையும் இவ்வரிகள் மூலநூலாசிரியர் கருத்துக்கு முரணானவற்றைக் குறிக்கவில்லை; மொழிபெயர்ப்பாசிரியரின் சொந்தக் கருத்தையும் தெரிவிக்கவில்லை.

சான்று:

எனக்கு ஓய்வில்லை, ஒழிவில்லை அமைதியில்லை!
கடற்கன்னிகளைச் சுற்றி நடனமாடுவேன்!
அவர்கள் கடலாழத்திலிருந்து வெளிப்படுவர்!
—அலை இசை. ப.103

Many times have I danced around mermaids
As they rose from the depths and ..'
—Song of the Wave

இக் கவிதையின் தொடக்கப் பகுதி தமிழில் பின் வருமாறு அமைந்துள்ளது இப்பகுதியின் மூன்றாம் வரி, முதலிரு வரிகளையும் நான்காம் வரியையும் விளக்குகிறது.

"பலமிக்க கரைதான் என் காதலன்!
நான் அவன் இனிய இதயம்!
நானும் கரையும் காதலர்கள்!
நாங்கள் காதலால் இணைக்கப்பட்டோம்!"
—அலை இசை ப. 103.

"The strong shore is my beloved
And, I am his sweetheart,
We are atlast united by love, and''
--Song of the wave

'பூவோ பூ' (Song of the Flower) என்ற கவிதையில் நிறைவுப் பகுதி ஆங்கிலத்தில்,

"This is the wisdom
Which man must learn

என அமைந்துள்ளது. தமிழில் அதே பகுதி பின் வருமாறு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது:

"மானிடனே நான் புகட்டும் பாடம் இதோ.
எப்போதும் தலை நிமிர்ந்து நில் நீ!
தலை தாழ்த்தி என்றுமே கீழ் நோக்காதே;"
'பூவே பூ —ப. 72

முதல் வரியுடன் மொழிபெயர்ப்பு நிறைவு பெற்றுவிட்டது அடுத்த இரு வரிகளும் இப்பகுதிக்கு முன்னதாக அமைந்திருந்த பின்வரும் வரிகளின் விளக்கமாக, இக்கவிதையின் அடிநிலைக் கருத்தாக அமைந்துள்ளது.

"நான் பேரொளியைக் காணத்தான்
விண்ணை அண்ணாந்து நோக்குவேன்;
நான் என் நிழல் காண என்றுமே
தலை தாழ்த்திக் குனிவதே இல்லை"
—(பூவோ பூ, ப.72)

இம்முறையில் மொழிபெயர்ப்பாசிரியர் சில பகுதிகளை, மொழிபெயர்த்ததோடு மட்டும் அமையாமல், மேலும் சில விளக்கங்களை முதலிலும் இறுதியிலும் அவ்வப் பகுதிகளிலும் கூட அமைத்துள்ளார்.

### 3. திரும்பக் கூறுதல்:

மக்கள் தொடர்பியலில், திரும்பத் திரும்பக் கூறுவதால் கூறுவோரின் கருத்து கேட்போரின் மனத்துள் ஆழப்பதியும் என்பது அனைவரும் ஏற்றுக்கொண்ட மெய்ம்மை ஆகும். நாட்டுப்புறப் பாடல்களிலும், பழந்தமிழ்த் தன்னுணர்ச்சிப் பாடல்களிலும் இவ்வுத்தி பயன்பட்டிருப்பதை அறியலாம். சி.எம் பௌராவின் 'வீரநிலைப் பாடல்கள்' எனும் நூல்

இதனைச் சான்றுகளுடன் விளக்கியுள்ளது. இவ் உத்தியை மொழிபெயர்ப்பில் அ.மா. சகதீசன் புகுத்தியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவர் ஒரே சொல்லுக்கு இரண்டு நிகரன்களை அடுத்தடுத்து அமைத்துள்ளார். இவ்வாறு திரும்பக் கூறுவதால் பொருள் அழுத்தம் கிடைக்க வாய்ப்புண்டு.

''காதலோ காதல்'' (Song of Love)

என்ற பாடலில் திரும்பக் கூறும் உத்தி தெற்றெனப் புலனாகிறது. சான்றாக,

''I am the poet's elation,
And the artists' revelation
And the musicians' inspiration,''
''yet I revealed myself to Solomon and
He drew Wisdom from my presence''

என்ற வரிகளில் உள்ள தடித்த எழுத்துச் சொற்கள் தமிழில் இரண்டு நிகரன்களைப் பெற்று வந்துள்ளன. அவை வருமாறு.

''நான் கவிஞர்களின் பெருமை! பெருமிதம் (elation)
ஓவியரின் விளம்பரம் வெளியீடு! களியாட்டம் (revelation)
பாடகரின் உணர்ச்சி வெள்ளம் ஆவேசம், (inspiration

''சாலமனுக்கு என்னையே
உணர்த்தினேன், வெளிப்படுத்தினேன்! (revealed)
என் உருவத்தின் முன்னிலையிலே
அவன் அறிவை, ஞானத்தைப் பெற்றான்! (wisdom)

இவற்றில் முதல் நிகரன் இயல்பாகவும், ஏற்புடையதாகவும் இருந்தாலும் கூட மறுபடியும் மற்றொரு நிகரனை மொழிபெயர்ப்பு ஆசிரியர் அமைத்துள்ளார். திரும்பவரும் இரண்டாம் நிகரனில் பொருள் வேறுபாடு அதிகம் இல்லை. இவ் இரண்டாம் நிகரன் முதல் நிகரனின் நிழலாக (shades of meaning) அமைந்துள்ளது.

## பிற உத்திகள்:

தத்துவம் பொதிந்த, இலக்கியச் செறிவுடைய கலீல் கிப்ரானின் படைப்புக்களை மொழிபெயர்த்த அ.மா. சகதீசன் மூலநூற் கருத்தை மாற்றாமலும், குறைக்காமலும் முரண்படுத்தாமலும் தம்முடைய கருத்தை ஏற்றி உரைக்காமலுமிருக்க மேற் கூறியவை தவிர வேறு சில உத்தி முறைகளையும் பயன் படுத்தியுள்ளார். அவையாவன:

1. எழுவாய் அல்லது பயனிலை சேர்த்தல்
2. தொடர்புடை யவற்றைச் சேர்த்துக் கூறுதல்
   சான்று; 'மலையும் மடுவும் என்றாவது இணையுமா?
   (இது மூலத்தின் மொழிபெயர்ப்பு)
   இவ்வரியைத் தொடர்ந்து வரும் அடுத்த வரி
   'மலைச் சிகரமும் சமவெளியும் சமமாகுமா?
   என்பது; இவ்வரி தொடர்புடையனவற்றைச் சேர்த்துக் கூறுவதாகும்.
3. பேச்சுத் தமிழைப் புகுத்துதல்
   சான்று: பலவானுக்கும் நோஞ்சானுக்கும் இடையே இப்போராட்டம் என்றுதான் முடியும்'

இத்தகைய பல்வேறு உத்திகள் பயன்படுத்தப்பட்ட போதும் கூட பெருவாரியாக சாலப் பயனுடையனவாக விளங்கும் மூன்று உத்தி முறைகள் மட்டுமே இக்கட்டுரையில் விளக்கப் பட்டுள்ளது.

## முடிவுரை:

மொழிபெயர்ப்புச் செம்மை பெறுவதற்கு உறுதுணையாய் அமையும் மேற்கூறிய உத்திகள், தமிழ் வாசகர் மூலநூல் ஆசிரியரான கலீல் கிப்ரானை நன்குபுரிந்துகொள்ளப் பேருதவி புரிகின்றன. மொழிபெயர்ப்பில் கடுமையை, அயன்மையையும் குறைத்து இயல்பாக அமைவதற்கு இவ்உத்திகள் உதவுகின்றன. மேலும் மூலநூலாசிரியரின் கருத்து, மொழிபெயர்ப்பைப் படிக்கும் வாசகர்களை முழுமையாக வந்து அடையவும் உதவுகின்றது. இதுவே மொழிபெயர்ப்பின் வெற்றியும் பயனுமாகும்.

மூலநூலைப்போன்று உணர்ச்சியைக் கிளறும் ஆற்றலை மொழிபெயர்ப்பு இழந்து விடுகிறது.

(எ-டு) " என்னுறு துயர்கண்டும் இடருறும் இவள்எனீர்
பொன்னுறு நறுமேனி பொடியாடிக் கிடப்பதோ
மன்னுறு துயர்செய்த மறவினை அறியாதோர்க்கு
என்னுறு வினைகாணா இதுவென உரையாரோ"
(ஊர்சூழ்வரி. 39-42)

என்ற உணர்ச்சி மிகு செய்யுளை உரைநடையில் கீழ்க் கண்டவாறு மொழிபெயர்த்திருப்பதைக் கூறலாம்.

" O seeing me in deep affliction and without
a word of consolation, is it fit that your
body, fair as the fairest gold, should lie
here in the dust? Will not people say that
it is my inevitable fate that made the
righteous king act thus wrongly in ingnorance"
(V R. R. The Cilappatikaram, p. 283)

மொழிபெயர்ப்பாளர் செய்யுளை உரைநடையில் மொழி பெயர்க்கும்போது அவரை அறிவில் ஊனமுடையவராக நாம் மாற்றி விடுகிறோம் என்றும் சில முயற்சிகளைத தொடங்கும் முன்னரே அவற்றை விட்டுவிடுமாறு வேண்டுகிறோம் என்றும் சேவரி கூறுகிறார். இக் கருத்தினைக கீழ்க்காணும் சான்று உறுதிப்படுத்துகிறது.

கடையன் கணணனார் பாடிய புறநானூற்றுச் செய்யுளில் இடம் பெறும் இடுகாட்டு வருணனை :

" களரி பரந்து கள்ளி போகிப்
பகலும் கூவும் கூகையோடு பிறழ்வாய்
ஈம விளக்கிற் பேய்மகளிரொடு
அஞ்சுவ தன்றியும் மஞ்சுபடு முதுகாடு"
புற. 356 (1-4)

இதனை,

> Wild vegetation has spread. the tree spurge
> has grow, even in the day time, with the
> hooting owl and the demonesses that resort
> to the crematory lamp, this deny graveyard
> looks terrible" (Kadu is the graveyard here]

என்று பி. டி. சீனிவாச ஐயங்கார் உரைநடையில் மொழி பெயர்த்துள்ளார்.

> "The jungle spreads
> Cactuses grow
> Owls hoot even by day
> And haunted by she - demons
> Gaping in the light of crematory fires
> This ancient smouldering cremation ground
> Looks fearful"

என்று ஏ.கே இராமானுஜன் செய்யுளில் மொழிபெயர்த்துள்ளார்.

இம்மொழிபெயர்ப்பு மேலே காட்டியுள்ள உரைநடை மொழிபெயர்ப்பைக் காட்டிலும் உணர்ச்சி நிரம்பியதாக இருப்பதனை அறியலாம்.

செய்யுளைச் செய்யுளாக மொழிபெயர்க்க வேண்டும் உரைநடையை உரைநடையாக மொழிபெயர்க்க வேண்டும் என்று போஸ்ட்கேட் எனும் பேராசிரியர், மொழிபெயர்ப்புகளும் மொழிபெயர்ப்பாளரும் என்ற நூலின் முன்னுரையில் வலியுறுத்தியுள்ளார். இதனை ஆதரித்த ஆர்ச்செர், லெனார்டுபோன்றோரும் செய்யுளில் மொழிபெயர்ப்பதேமிகத் துல்லியமாகவும் மிகச்சரியாகவும் இருக்கும் எனக்கூறினர்.

"(செய்யுள் மொழிபெயர்ப்பினை ஒரு திறனாய்வாகக் கருதுவதால்) 'புதிய செய்யுட்களைப் படைப்பது போன்று சிறந்த பணியாக மொழிபெயர்ப்பு விளங்கினாலும் இஃது அதனினும் கடினமானதும் அரிதாகப் பெற்ற பேற்றினால்

(Rare Gift) இயல்வதும் ஆகும்'' என நோவாலிஸ் கூறும் கருத்தை பிராவர் எடுத்துக் காட்டுகிறார். இவர் மொழிபெயர்ப்பாளரை 'ஒப்பியல் திறனாய்வாளர்' என்றும், தழுவலாசிரியரை 'இலக்கிய வரலாற்றறிஞர்' என்றும் விளக்குகிறார், இதுகாறும் கூறியவற்றால் செய்யுளைச் செய்யுளாக மொழிபெயர்க்க வேண்டும் என்பதில் அறிஞர்கள் உறுதியாக இருந்தமை புலனாகும்.

**செய்யுள் மொழிபெயர்ப்பின் வகைகள்**

செய்யுள் மொழிபெயர்ப்புகளை ஆண்ட்ரு லெஃபிவெரே ஏழாக வகைப்படுத்துகிறார். மேலும் அவர் அவற்றின் இயல்புகளையும் விளக்குகிறார்.

1, **ஒலியன் மொழிபெயர்ப்பு** (*Phonemic Translation*)

ஒலிக்கு மட்டும் முக்கியத்துவம் அளிப்பதனால் இம் மொழி பெயர்ப்பு பொருளைச் சிதைத்து விடும் வாய்ப்பினை உடையது.

2. **சொல்லுக்குச்சொல் மொழிபெயர்ப்பு** (*Literal Translation*)

சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பாக இருப்பதனால் இம்மொழிபெயர்ப்பில் மூலத்தின் பொருண்மையும் உணர்வும் மாறி விடக்கூடும்.

3. **யாப்புநெறி மொழிபெயர்ப்பு** (*Metrical Translation*)

யாப்புக்கு மட்டுமே இவ்வகை மொழிபெயர்ப்பு முக்கியத்துவம் அளிப்பதனால் மற்ற கூறுகள் சிறப்படைவதில்லை.

4. **உரைநடை மொழிபெயர்ப்பு** (*Prose Translation*)

செய்யுளை உரைநடையாக மொழிபெயர்ப்பதனால் மூலத்தின் உணர்ச்சி, தொடர்புத்திறன், பொருண்மை ஆகியன குறைந்துவிடுவதுண்டு.

5. **சந்தநய மொழிபெயர்ப்பு** (*Rhymed Translation*)

சந்த நயத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து பிற சுவைகளை இடம் பெறாமற் செய்துவிடும் வாய்ப்புக்கள் இதில் உள்ளன.

**6. விடுநிலைப்பா மொழிபெயர்ப்பு (*Blankverse Translation*)**

மிகுந்த துல்லியமும் அதிகபட்ச இலக்கிய நயமும் இம் மொழிபெயர்ப்பு பெற்றிருப்பதாகச் கருதப்படுகிறது.

**7. கருத்துவிளக்க மொழிபெயர்ப்பு (*Interpretation*)**

இவ்வகை, பாடபேத ஆய்வை மேற்கொண்டு பின்னர் மொழிபெயர்க்கப்படுவதாகும்.

இவ்வகைகளுள் விடுநிலைப்பா மொழிபெயர்ப்பு மூலத்தின் வடிவத்தையும் நயத்தையும் மொழிபெயர்ப்பில் கொணர்வதுடன் நம்பகத்தன்மை உடையதாகவும் அமைந்துள்ளது. தமிழில் சங்க இலக்கியத்தை மொழிபெயர்த்துள்ள ஆசிரியர்களும், விடுநிலைப்பா வடிவமே மூலத்துடன் தொடர்புடையதாய்த் தோன்றுகிறது என்று கூறுவது இவண் குறிப்பிடதக் தக்கது.

மேற்காட்டிய வகைமை தவிர வேறு முறையிலும்செய்யுள் மொழிபெயர்ப்புக்களை வகைப்படுத்தியுள்ளனர். அவை

**1. உண்மையான செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு (*True Poetic Translation*)**

இது இயன்றவரை வடிவத்தையும் கருத்துக்களையும் மாற்றாமற் செய்வது; ஜி.யு. போப்பின் திருக்குறள், திருவாசக மொழிபெயர்ப்புக்களை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

**2. தழுவல்நிலைச் செய்யுள் மொழிபெயர்ப்பு (*Adapted Poetic Translation*)**

ஏ.வி. சுப்ரமணியத்தின் சங்க இலக்கிய மொழிபெயர்ப்புக்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**3. உரைநடை மொழிபெயர்ப்பு (*Prose rendering Translation*)**

தெ.பொ. மீ மற்றும் பி.டி.சீனிவாச அய்யங்காரின் சங்க இலக்கிய மொழிபெயர்ப்புக்களை இதற்குச்சான்றுகாட்டலாம்.

## 4. உரைவிளக்க மொழிபெயர்ப்பு
### (*Explanatory Prose Rendering*)

இவ்வகை, செய்யுளை உரைநடையில் மொழிபெயர்க்கும் போதும் மிக விளக்கமாகக், கருத்துக்களை கூடுதலாகச் சேர்த்து மொழிபெயர்ப்பதாகும்.

இவ்வகையின நான்கும் செய்யுள் வடிவினை மட்டு மின்றி உரை வடிவத்தையும் உள்ளிட்ட மொழிபெயர்ப்பு வகைகளைக் கொண்டுள்ளன.

உணர்ச்சியும் செறிவும் மிகுந்த இலக்கிய வடிவமாகச் செய்யுள் இருப்பதனால் தான் பலவகையான மொழிபெயர்ப்பு முறைகளுக்கு இஃது இடம் அளிக்கின்றது. தமிழில் மரபுச் செய்யுட்களை மொழிபெயர்க்கும் போது அதன் யாப்பு வடி வத்துக்கு இணையான பெறுமொழி யாப்பு வடிவத்தைத் தேர்வு செய்வது சிக்கலான பணியாகும். இதனால் விடுநிலைப் பாவினை ஏற்றுக் கொண்டு மொழிபெயர்ப்புச் செய்துள்ளனர். சங்க இலக்கிய மொழிபெயர்ப்புக்கள் சில இவ்வாறு அமைந் துள்ளன.

### சிக்கல்கள்

செய்யுளைச் செய்யுளாக மொழிபெயர்ப்பதில் பல்வேறு வகைகளைப் பின்பற்றிய மொழிபெயர்ப்பாசிரியர்கள் அப் பணியில் யாப்பு, நடை, அணி, பண்பாட்டுச் சூழமைவு போன்ற பல சிக்கல்களைச் எதிர்கொண்டுள்ளனர். செய்யுள் மூல மொழியில் ஏற்படுத்திய அல்லது தூண்டிய உணர்ச்சியைப் பெறுமொழியின் மொழிபெயர்ப்பும் கொடுக்கவேண்டும். லேவி ஸ்ட்ராஸ் இக்கருத்தினை விளக்கும் போது 'குறைந்த முயற் சியில் நிறைவான விளைவைத் (Effect) தருதல்' என்று கூறி, இதனை 'குறைவில் நிறைவுக் கொள்கை (Minimax Strategy) என்று கூறுகிறார். மூலமொழி வாசகன் பெற்ற உணர்வைப் பெறுமொழி வாசகனும் பெறவேண்டும் என்று நைடா கூறு வதும் இக்கருத்தையே வலியுறுத்துகிறது.

**1. கவிநயம்**

இச்சிக்கலைத் தெளியவுணர்ந்த ஸர். ஜான் டன்ஹாம் ''மொழிக்கு மொழிபெயர்த்தளிப்பது மட்டும் மொழிபெயர்ப்பு ஆகாது. செய்யுளின் கவிநயத்தையும் (Poesie) பெயர்த்தளிக்க வேண்டும். ஒரு மொழியிலிருந்து பிறிதொரு மொழிக்கு மாற்றும் போது (செய்யுளின்) கவித்தன்மை (Spirit) மறைந்துவிடும். இதனால் புதியமுறையில் (மொழிபெயர்ப்புக்கு) உயிர்ப்பூட்ட (Transfusion) வேண்டும்'' என்கிறார். கார்லைல், லே ஹாண்ட், ஆர்ச் பிஷப், வேட்லி போன்றோரும் கவிநயக் கூறுகள் இடம் பெறாவிடில் செய்யும் மொழிபெயர்ப்பு நிறைவு பெறா ததாகி விடும் என்று கருதுகின்றனர்.

மூலநூல் கவிஞனின் சிந்தனையைத் தூண்டிய காட்சியை மொழிபெயர்ப்பாளன் தம் மொழி வாசகருக்குக் காட்ட வேண்டும். இச்சிந்தனைத் தூண்டுதல் மொழிபெயர்ப்பினைத் தரமுடையதாக மாற்றுகிறது ஓவியன் வண்ணங்களைக் கொண்டு உருவாக்கும் ஓவியத்தைக் கவிஞன் தம் சொற் களைக் கொண்டு செய்யுளாக உருவாக்குகின்றான். எனவே ஓவியம் உணர்த்தும் உணர்ச்சி கவிதையிலும் கிடைக்கப் பெறவேண்டும்.

(எ-டு): அல்ல குறிப்பட்டுத் திரும்பி வரும் தலைவனின் புலம் பலைப் பரணர் சொல்லோவியமாகக் குறுந்தொகையில் தந்துள்ளார். இதனை ஏ கே இராமானுஜன் ஆங்கிலத்தில் விடு நிலைப்பா வடிவில் மொழிபெயர்த்துள்ளார். இம்மொழி பெயர்ப்பு மூலநூற் கவிஞன் காட்டிய காட்சியைப் பெறுமொழி வாசகருக்கு காண்பிக்கின்றது.

''இல்லோன் இன்பம் காமுற்று ஆங்கு
அரிது வேட்டனையால் நெஞ்சே காதலி
நல்ல ளாகுதல் அறிந்தாங்கு
அரிய ளாகுதல் அறியா தோயே'' (குறுந். 120)

"Like a poor man
Craving pleasures
You want most
What is most precious
My heart.
The same way you learned
How good she is
You didn't learn
How rare she is
And difficult to obtain"

2. காலம்

செய்யுள் மொழிபெயர்ப்பில் செய்யுளின் உணர்ச்சியை புரிந்து கொள்ள உதவும் முக்கிய காரணிகளுள் ஒன்று காலச் சூழல் ஆகும். இவ் இலக்கிய வகை தற்காலத்தியது அன்று. செய்யுள் பாடிய காலம் மாறிவிட்டது, செய்யுள் எழுதிய புலவர்களும் அக்காலத்து மக்களும் மாறிவிட்டனர். எனவே செய்யுளுக்குரிய. சூழல் மாறிவிட்டது. காலமும் சமூகமும் தமக்கேற்ற இலக்கிய வகையைக் மட்டுமே தக்க வைத்துக் கொள்கின்றன. இந்நிலையில் பண்டைய இலக்கிய வகைக் குரிய சூழலும் காலமும் மறைந்துவிட்டதால் வேறுபட்ட புதிய சூழலில் பழைய உணர்ச்சியை எடுத்துக்காட்ட முற்படும் மொழிபெயர்ப்பாளர்கள் சிக்கலை எதிர் நோக்குகின்றனர்.

பெறுமொழி வாசகர், மனத்தளவில் பழைய காலத் தையும் சூழலையும் ஏற்க தயாராக இருக்கவேண்டும். அப் போது தான் மூலபாடம் வெளிப்படுத்தும் உணர்ச்சியை அவரும் பெற இயலும். சான்றாக. பாரதியாரின் தேசியப் பாடல்கள் மொழிபெயர்ப்பைக் கூறலாம். இவை தோன்றிய காலச்சூழல் அப்பாடல்களுக்குக் கொடுத்த உணர்ச்சி அழுத் தத்தை ஆங்கில மொழிபெயர்ப்பால் இன்று பெறுவது கடினம். (எ-டு)

எல்லாரும் இந்திய மக்கள்
எல்லாரும் இந்திய மக்கள்
எல்லாரும் ஓர் நிறை எல்லாரும் ஓர் விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்''

"One family are we all
Children of one dear mother
All are equal, all alike
No high and no low among us
Of equal weight and equal price
Each one of us is a king
Yes we are kings of this land
Yes all of us are kings of our own land!"

இந்நாட்டு மன்னர்' என்ற தொடர், மூலபாடம் எழுதப்பெற்ற 'காலத்தில் பெற்ற அழுத்தத்தையும் தற்போதைய குடியரசுக் காலத்தில் அதன் மொழிபெயர்ப்பால் தரவியலாது.

## 3. அணிநயம்

அணி, சந்தம் போன்ற கூறுகளில் சிலவற்றை, மொழி பெயர்ப்பாளர்கள் கூட்டவும் குறைக்கவும் செய்வர். இதனை இவர்கள் குறைபாடாகக் கருதுவதில்லை. இப்போக்கினை சேவரி ''இதனால் மொழிபெயர்ப்பாளன் சோம்பல் மிகுந்தவனாகவும், தன் அறியாமையை மறைத்தவனாகவும் மாறுகிறான்'' என்று கூறி, இக்குறைபாட்டினை 'மொழிபெயர்ப்புச் சீர்குலைவு' (Translational Imperfection) என்று சுட்டுகிறார். உட்ஹௌஸ்லி பிரபு 'மொழிபெயர்ப்பாசிரியருக்கு அளிக்கும் இச் சுதந்திரம் அவர்களைத் தவறாக வழிநடத்தும்' என்கிறார்.

லேவி ஸ்ட்ராஸ், மூலநூலின் கடினமான பகுதியைச் சுருக்குவதும் நீக்குவதும் அறனில்லாத செயல் எனக்கூறி செய்தியின் பொருளில் மட்டுமல்லாது அதன் நடையிலும் வடிவத்திலும் கூட அக்கறை செலுத்தவேண்டும் என்கிறார், ஏனெனில், மொழி பெயர்ப்பாசிரியர் மூலநூலின் ஆசிரியராக

மாற முடியாது என்றும், பெறுமொழி வாசகரைப் பொறுத்த வரை மனச்சான்றுடைய பொறுப்புள்ள ஆசியராக விளங்க வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். எனவே செய்யுள் மொழி பெயர்ப்பில் அதன் நயங்களையும் கருத்திற்கொள்ள வேண்டும்.

சங்க அக இலக்கியத்தின் தனித்த சிறப்பாகக் கருதப் படுவது அதன் உள்ளுறை உவமமாகும். மொழிபெயர்ப் பாசிரியர் இவ் உவமத்தைப் பெறுமொழி வாசகருக்கு உணர்த்தாவிடில் அவருடைய மொழிபெயர்ப்புப்பணி நிறை வுடையதாகாது. துணைக்குறிப்புக்கள் கொடுத்து இவ்வுவமச் சுவையைப் பெறுமொழி வாசகர் உணரச்செய்வது மொழி உணரச்செய்வது மொழிபெயர்ப்பின் நாடகத் தன்மையையும் மொழிபெயர்ப்பாசிரியரின் நேர்மையையும் புலப்படுத்தும்.

"யாவதும் அறிகிலர் கழறு வோரே
தாயின் முட்டை போலஉள் கிடந்து
சாயின் அல்லது பிறிதெவன் உடைத்தே
யாமைப் பார்ப்பின் அன்ன
காமங் காதலர் கையற விடினே" (குறுந். 152)

என்ற செய்யுளில் இடம்பெற்றுள்ள 'யாமைப் பார்ப்பின் அன்ன' என்ற உவமம் புலப்படுத்தும் நுண்பொருளைப் பெறு மொழி வாசகருக்குத துணைக்குறிப்பு மூலம் மொழிபெயர்ப் பாசிரியர்கள் அளிக்கின்றனர். சான்று.

"Gossips know nothing
When the one you love
With a love like a look
Of a young turtle"

**துணைக்குறிப்பு:**

"The love she has for him is like the, 'look of the young turtle because it grows in quantity and quality everd time she is with him, just as the turtle grows in size any character as it looks upon its mother".

இவ்வாறாகத் துணைக்குறிப்பு அளிப்பதனால் பெறு மொழி வாசகரும் மூலமொழி வாசகர் பெற்ற கவிச்சுவையைப் பெறமுடியும். 'யாமைப் பார்ப்பின்' என்பதை எதற்காக உவமித்துள்ளனர் என்று அறியாவிட்டால் செய்யுளின்பம் கிட்டுவதில்லை.

மேற்கூறிய சிக்கலை உணர்ந்த வெர்ஜீனியா உல்ஃப் ''கிரேக்கத்தை மொழிபெயர்ப்பில் படிப்பது பயனற்றது. மொழிபெயர்ப்பாளர்கள் செய்தியை மேலோட்டமாகத்தான் கொடுத்திருப்பர்'' என்பார். கிரேக்கம் இசையும் உணர்ச்சியும் இணைந்த மொழியாதலால் அங்கு இச்சிக்கல் வலியுறுத்தப் படுகிறது. ஆனால் கிரேக்கத்தை விட பண்பட்ட மொழி யான தமிழில் தோன்றி உள்ள சங்க அக இலக்கியத்தில் காணப்பெறும் கருத்துச் செறிவும் குறிப்புப் பொருளும் மொழிபெயர்ப்பில் கிடைப்பது அரிது'' என்ற கருத்தும் இவண் சுட்டுதற்குரியது.

4. நடை

செய்யுள் மொழிபெயர்ப்பில் செய்யுள் இயற்றப்பட்ட காலத்து மொழிநடை, மொழிபெயர்க்கப்படும் காலத்து மொழி நடை என்று நடை, இருவகைப்படும். பழமையான நடையில் மொழிபெயர்ப்பதனை 'கிரேக்க ஆக்கம் / பழமையாக்கம்' (Hellenization/Archaization) என்பர். சிலர் மூலநூலினை ஒட்டி அதன் பண்பியல் மரபுகளையும், தொடர்களையும் பாதுகாக் கும் நோக்கத்துடன் மூலமொழியின் இயல்பிற்கேற்ப மொழி பெயர்ப்பதனைப் 'பழமையாக்கம்' என்று அழைப்பதுண்டு. மொழிபெயர்க்கும் காலத்து மொழிநடையில் மொழிபெயர்ப் பதனைப் 'புதுமையாக்கம்' (Modernisation) என்பர். மூல மொழியின் இயல்பைப் பொருட்படுத்தாது பெறுமொழியின் தன்மைக்கேற்ப மொழிபெயர்த்து அளிப்பதனை இவ்வாறு அழைப்பதும் உண்டு. இவ்விரு கலைச் சொற்களும் கிரேக் கத்திலிருந்து ஆங்கிலத்திற்கு நூல்களை மொழிபெயர்த்தபோது தோன்றியவையாகும். மொழியும் சமுகமும் ஒன்றுடனொன்று நெருங்கிய உறவு உடையனவாய் இருப்பதனால் தற்காலச்

சமூகத்திற்குத் தற்கால மொழிநடையில் வழங்குவது தான் ஏற்றற்குரியது எனக் கருதும் எஸ். ஹெச். வாத்ஸ்யாயனா பழங்காலத்து மொழிநடையைப் பயன்படுத்துவதை 'அச்சுறுத்தும் கால வழுவாகக்' (Screaming Anachronism) கருதுகிறார். எனவே செய்திகளையும் அவற்றின் இயல்புகளையும் கருத்திற் கொண்டு வாசகருக்கு ஏற்ற மொழிநடையை மொழிபெயர்ப்பு ஆசிரியர் தேர்வு செய்யவேண்டும்.

**5. யாப்பு**

மூலநூலில் ஆசிரியர் தேர்வு செய்துள்ள யாப்பு வகை அவரது பாடுபொருளுக்கு ஏற்றதாக அமைந்திருக்கும். உள்ளடக்கத்துக்கு ஏற்ற இவ்வடிவத்தேர்வு மூலமொழி மரபை ஒட்டியது. தொல்காப்பியம் இத்தகு விதிமுறையைத் தமிழில் அக இலக்கியத்திற்குக் கூறியுள்ளது. மரபு சார்ந்த இவ்வகையாப்பு வடிவங்கள் பெறுமொழிக்கு அறிமுகமில்லாதன. இவ்வடிவத்தில் மொழிபெயர்த்தால் பெறுமொழி வாசகர் அயன்மை உணர்வைப் பெறுவர். சான்றாக, 'Sonnet' எனப்படும் 14 வரி ஆங்கில யாப்பினை, தமிழில் மொழிபெயர்க்கும் போது தமிழ்க் கவிஞர்கள் பின்பற்றியிருக்கின்றனர் ஆனால் தமிழில் 14வரியில் ஒரே செய்யுளாக, எதுகை. மோனை நயமின்றி ஆங்கிலத்திற்குரிய இயைபு தோன்ற அமையும் போது தமிழ் வாசகருக்குக் கவியின்பம் கிட்டுவதரிது. மூலசெய்யுள் அளித்த உணர்ச்சியைப் பெறுமொழிச் செய்யுளால் அளிக்க இயலாது.

சங்க இலக்கிய மொழிபெயர்ப்பை ஆராய்ந்த பன்னீர் செல்வம் செய்யுள் மொழிபெயர்ப்பில் ஏற்படும் யாப்புச் சிக்கல் குறித்து வருமாறு குறிப்பிடுகிறார். "சங்க இலக்கியத்தின், குறிப்பாக அகப்பாடல்களின் முக்கிய பண்பு அதன் கட்டுமுறையே (Composition) ஆகும். எனவே தொல்காப்பியப் பொருளதிகாரத்தைத் தெளிவாகக் கற்றுணராதோர் சங்க இலக்கியத்தை மொழிபெயர்க்க முனைதல் அரிது". இதனால் யாப்பு முறையை முற்றிலுமாக நீக்கி விடவும் முடியாது. ஏனெனில் யாப்பினால் பெறும் ஓசையின்பமே செய்யுள் வடிவமைப்பின் உயிர்ப் பொருள் ஆகும்; இவ்வின்பம் மொழியின் ஓசையின்பமாக,

கவிஞனின் அனுபவமாக, செய்யுள் வெளிப்பாடாக விளங்குகின்றது. எனவே யாப்பு ஒரு சிக்கலான அமைப்பாக செய்யுள் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளது. இதற்குத் தற்காலிகத் தீர்வாக விளங்குவது விடுநிலையப்பா வடிவமாகும்.

விடுநிலையப்பா வடிவம் செய்யுள் வரிகளையும் பொருளையும் கூட்டவும் குறைக்கவும் உதவுகிறது. சங்க இலக்கியத்தை மொழிபெயர்ப்பாக அன்றி 'மொழிக்கட்டாக' (Transcomposition) அளித்திருக்கும் ஏ.வி. சுப்பிரமணியம் 22 சொற்களால் கட்டப்பட்ட 'யாருமில்லைத் தானே கள்வன்'' என்ற குறுந்தொகைச் செய்யுளை 91 சொற்களில் விரித்துக் கட்டியுள்ளார்.

''யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டு தான்மணந்த ஞான்றே'' குறுந்.25

It's quite a time
Since he stopped coming
What will I do, dear
If he breaks the truth?
What will I do
If he denies all
All that happened
In the river bank
Deep in the heart
Of the leafy lower?
For there was no witness
To testify
Excepting him
And poor me
There was none
(Who could bear
testimony......)
But in truth
There was one
A lone witness
Standing still

On a spindly leg?
Await for
The casual fish
Come swimming by
Was a lone heron
On the water's edge.

இவ் விரிவாக்கத்திற்கு விடுநிலைப்பா உதவியுள்ளது.

விடுநிலைப்பா மொழிபெயர்ப்பு, யாப்புக்கட்டுகளிலிருந்து விடுபட்டதாகும். இப் பா வடிவை தியோடர் சேவரி 'Prose - Poetry' அல்லது 'Poetic Prose' என்று அழைப்பார். அடி வரையறை, அசைக் கட்டுப்பாடு, ஒலி இயைபு ஆகியன இப் பா வகைக்கு இல்லை, எனினும் இதனால் மூலபாடச் செய்யுளின் பொருளையும் அதன் இயக்கத்தையும் அதே பொருளிலும் அதே முறையிலும் அடுத்த மொழிக்குப் பெயர்த்தளிக்க முடியும். எனவேதான யாப்புச் சிக்கலுக்கு செய்யுள் மொழிபெயர்ப்பில் இஃது ஒரு தீர்வாக அமைந்தது.

விடுநிலைப்பா அளிக்கும் செய்யுட் பொருளும் அதன் இயக்கமும் பெறுமொழி வாசகர் படிக்கும் போது அவருக்கு மூலநூலைப் படிக்கும் தூண்டுதலை (Incentive) ஏற்படுத்தும். இம்மொழிபெயர்ப்பு படிப்பதற்கு ஒரு புதிய நூலாக, புதிா அறிவு முயற்சியின் விளைவாகத தோற்றமளிக்கும். மனித நேய அடிப்படையில கருத்துக்கள் சென்று சேர்வதனால் யாப்பு, அணி, உத்தி போனற அயன்மைக் கூறுகள் வாசகருக்கு இடையூறாய் இருப்பதில்லை

**மொழியாக்கம் (Transcreation)**

செய்யுள் மொழிபெயர்ப்புகள் இயந்திரமாகத் தோன்றுகின்றன என்று கருதும் சிலர் மொழியாக்கத்தை (Transcreation) ஆதரிப்பர். மொழியாக்கம் மூலநூலின் நிகழ்ச்சிகளையும், பாத்திரங்கயையும் தம் மொழிக்கு ஏற்ப மாற்றி அமைக்கும். இதனால் மூலக்கருத்து சிதைவுறாது, ஆனால் செய்திகளைக் கூட்டியும் குறைக்கவும் முடியும். ஷேக்ஸ்பியர் எழுதிய நாடங்களைத தமிழில் செய்யுள் வடிவில் மொழிபெயர்த்த போது அறிஞர்கள் மொழியாக்க முறையைப் பின்பற்றினர்.

சுஜித் முகர்ஜி, ''மொழியாக்கம் மூல நூலிலிருந்து விலகிச் செல்வது போல் தோன்றினாலும் இதுவே மூல நூலோடு நெருங்கிய தொடர்புடையது'' என்பார் பெறுமொழியினர் தம் பண்பாட்டுக்கு ஒவ்வாதவற்றை நீக்கிவிடுவது மொழி யாக்கத்தின் குறிப்பிடத்தக்க இயல்பாகும் இதனால் தான் ஃபிட்ஜெரால்டு மொழிபெயர்த்த 'ருபாயத்' எனும் உமார் கய்யாம் படைப்பை ஆங்கில வாசகர்கள் மொழியாக்கமாகக் கொள்கின்றனர். கம்பராமாயணம், சீவக சிந்தாமணி, சீறாப் புராணம், இரட்சணிய யாத்திரீகம் போன்ற காப்பியங்களை மொழியாக்கத்திறகுச் சான்றாகக் காட்டலாம்.

## தழுவல் (Adaptation)

தழுவல் என்பது மூலநூலை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்படும் புதிய படைப்பாகும். இப்படைப்பு இலக்கிய மொழிபெயர்ப்பாகவோ, மொழியாக்கமாகவோ இராது. முற்றி லுமாக மூலநூலிலிருந்து வேறுபட்டுத்தோன்றும். ஆயினும். மூலக்கரு மட்டும் ஒன்றாகக் காணப்படும். இதற்கு இவ் ஆசிரியர் மூலநூலை மட்டும் படிப்பது நிறைவுடையதாகாது. அந்நூல் தோன்றிய காலம், அதன் பின்னணி, ஆசிரியர் வரலாறு, நூல் ஏற்படுத்திய தாக்கம் ஆகியவற்றையும் அறிந் திருக்க வேண்டும். எனவே தான் தழுவலாசிரியர் பற்றிக் குறிப்பிடும்போது அவரை ''அவ் இலக்கியத்தின வரலாற்றா சிரியர்'' (Historion of Literature) என்கின்றனர். இத்தகு பெரு முயற்சியினைக் கொண்டு தோன்றும் தழுவல் படைப்புகள் மூலநூலைப்போல்பெறுமொழியிலும் வரவேற்புப்பெறுகின்றன. கவிமணியின் உமார்கய்யாம் பாடல்கள்' மொழிபெயர்ப்பைத் தழுவல் என்று கூறலாம்.

## தொகுப்புரை

இலக்கிய மொழிபெயர்ப்பில் செய்யுளைச் செய்யுளாக மொழிபெயர்க்க வேண்டும் என்பது மொழிபெயர்ப்புத் திறனாய் வாளர் முடிவு. இம் மொழிபெயர்ப்பில் மூலமொழியின் செய்யுள் வடிவிற்கேற்ப பெறுமொழியில் செய்யுள் வடிவைத் தேர்வு செய்வது சிக்கலான பணியாதலால் இரு மொழிகளின் யாப்புக்

கட்டுகளுலிருந்தும் விடுபட்டு, தற்காலத்தில் பரவலாக இயங்கி வரும் விடுநிலைப்பா வடிவினைச் செய்யுள் மொழிபெயர்ப்புக்கு ஏற்ற வடிவமாகத் தேர்ந்தெடுத்துள்ளனர்.

செய்யுள் மொழிபெயர்ப்பில்'மொழிபெயர்ப்பாசிரியர்கள் செய்திகளைக் கூடுதலாகச் சேர்ப்பதும் நீக்குவதும் ஏற்றற் குரியதன்று.

கருத்துக்களுக்கு முக்கியத்துவம் அளிப்பதனைப் போன்று கவிநயத்துக்கும் முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.

மூலநூலின் தோற்றச்சூழல் மறைந்து விட்ட இவ் வேளைகளில் அதனை மொழிபெயர்ப்பாகப் பெறுமொழியில் ஏற்கும் சூழல் இருக்கின்றதா? என்பதை முதற்கண் ஆராய வேண்டும். ஏனெனில் பெறுமொழி வாசகர் ஏற்காத நிலையில் அம் மொழிபெயர்ப்பு போதிய வரவேற்பைப் பெறாது ஏட்டளவில் இருந்துவிடும்.

உள்ளடக்கத்தில் பொதிந்துள்ள உத்திகளையும் நயங் களையும் மொழிபெயர்ப்பில் உணர்த்தவியலாதபோது அவற் றைப் பெறுமொழி வாசகர் உணர்வதற்காக தனிக் குறிப்பு களாக அவ்வச் செய்யுளுடன் அளித்துவிடவேண்டும். இத னால் மூலநூற்செய்யுளின் கவியின்பத்தைப் பெறுமொழிச் செய்யுளும் கொடுக்க முயலும். அணிநய, மொழிநடைச் சிக்கல்களை இவ்வாறு தீர்க்க முனையலாம்.

செய்யுள் மொழிபெயர்ப்பைப் பெறுமொழியின் பண் பாட்டிற்கேறப மாற்றியமைக்கும் போது அப்படைப்பு மொழியாக்கமாகக் கொள்ளப்படுகிறது.

மூலநூலின் ஏதேனும் ஒரு சில கருத்துக்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டு புதிதாக உருவாக்கப்படும் படைப்பு தழுவலாகக் கருதப்படுகிறது.

# துணை நூற்பட்டியல்


1. Theodore Savory, The Art of Translation, Jonathan Gape, London, 1968.

2. Susan Bassnett - McGuire, Translation Studies Mutheun & Co., London, 1980.

3. Eugene A. Nida & Charles *R*. Taber, The Theory and Practice of Translation, U.B S., Leiden 1969.

4. Sujit Mukherjee, Translation as discovery and other essays' Allied Publications, Delhi, 1981.

5. A.K. Ramanujan, Poems of Love and War, Oxford University Press, New Delhi.

6. Pramod Talgeri & S.B. Verma. (Edrs), Literature in Translation, Popular Prakashan, Bombay, 1988.

7. Trivedi H.C., Cultural and Linguistic Problems in Translation, The New Order Book Company, Ahmedabad, 1971.

8. மகரம் (தொ. ஆ)., எழுதுவது எப்படி? (தொகுதி II) பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1987.

9. Srinivasa Iyengar, P.T., The History of the Tamils,

10. சண்முகவேலாயுதம் சு., மொழிபெயர்ப்பியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985. பால்கள் '90

# மொழிபெயர்ப்பில் 'கற்பு'

பண்பாடும் மொழியும் ஒன்றிலொன்று இணைந்துள்ளன. பண்பாடு சாராத மொழியும் இல்லை மொழி சாராத பண்பாடும் இல்லை. அங்ஙனம் ஒரே சமூக உண்மையைப் புலப்படுத்தும் இரண்டு மொழிகள் உலகில் இல்லை. ஒவ்வொரு மொழியும் தனித்தன்மையுடன், மற்றவற்றிலிருந்து வேறுபட்டு விளங்கு கிறது. ஒவ்வொரு சமூகமும் தமக்குள் வேறுபட்டுத் தனித் தன்மை பெற்றுத் திகழ்கின்றது. இந்நிலையில் ஒரு மொழியில் சொல்லப்படும் சமூகச் செய்தி ஒன்றினை அம்மொழி பேசுவோர் புரிந்து கொள்வதுபோல அதனை வேறொரு மொழியில் சொல்லி அவ் வேற்றுமொழியினரைப் புரிந்துகொள்ள வைப்பது சிக்கலான பணியாகும். சான்றாக, ஊசியிலைக் காட்டுப் பகுதிகளில் வாழும் மனிதன் 'மரம்' என்று சொல்லும்போது பெறும் மன உணர்வை வெப்பநிலை காட்டுப் பகுதிகளில் (Tropical Forest) வாழும் மனிதன் பெறுவதில்லை. ஏனெனில் முதல் மனிதன் பார்வை யில் பிறந்தது முதல் பதிந்த மரத்தின் உருவம் நீண்டுயர்ந்த மரத்தின் உருவம், இரண்டாம் மனிதனின் பார்வையில் பதிந் திருப்பது அகன்று அடர்ந்த மரத்தின் உருவம்.

## 1. பண்பாட்டுச் சிக்கல்

மொழிபெயர்ப்புச் சிக்கல்களை வகைப்படுத்திய அறிஞர் பெருமக்கள் அவற்றை,

1 மொழியியல் சிக்கல்,

3. பண்பாட்டுச் சிக்கல் (மொழியியல் அல்லாதன)

3. மறு படைப்புச் சிக்கல் (Re creative)

என மூன்றாகப் பகுத்துள்ளனர் இவற்றுள் பண்பாட்டுச் சிக்கல் சொல்லின் சமூகச் செயற்பாட்டையும், சமூகப் பங்கினையும் புலப் படுத்துவதில் ஏற்படும் சிக்கலைக் குறிக்கிறது. பண்பாடு சமூகத்தின் — அதன் செயற்பாட்டின் ஓர் அங்கமாக திகழ்கிறது. இதனை அச்சமூகம் சாராத பிறிதொரு சமூகத்தாருக்கு எடுத்துரைப்பது சிக்கலான பணியாகும். இப்பணியில் சொல்லுக்குப் புறத்தே அல்லது சொல்லின் பின்னணியில் உள்ள அம்மொழி பேசும் மக்களின் பண்பாடு சார்ந்த கருத்துக்களை

மொழிபெயர்ப்பாசிரியர் அறிந்திருக்க வேண்டும். அவ்வாறின்றி சொற்பொருளை — அதன் அகராதிப் பொருளை — மொழி பெயர்த்தால் நூலாசிரியரின் செய்தியை முரண்படக் கூறிய குற்றத்திற்கு, நம்பகத்தன்மையற்ற நிலைக்கு ஆளாக நேரிடும்.

## பண்பாட்டின் அயன்மை

சொற்பொருள் அல்லாது கருத்துப்பொருள் ஆள்வதனைத் தொல்காப்பியர் கூறும் 'பொருண்மை தெரிதலோடு' ஒப்பிடலாம். 'சொன்மை தெரிதலை'ச் சொற்பொருள் எனவும். 'பொருண்மை தெரிதலை' நுண்பொருள் எனவும் கருத்துப் பொருள் எனவும் கூறலாம்.

பண்பாட்டுச் சிக்கல் கற்பு, பிறன்மனை நயவாமை, வாய்மை அறம் போன்ற சமூக மதிப்புகள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறை, சிந்தனைப்போக்கு, பழக்கவழக்கங்கள், சடங்குகள் ஆகியவற்றை மொழிப்பெயர்ப்பதில் தோன்றுகிறது. முற்றிலும் வேறுபட்ட அயல் பண்பாடு பற்றிய செய்திகளை மொழிபெயர்ப்பில் படிக்கும்போது வேற்றுமொழியினர் தம்மால் உணர்தற்கரிய குழப்பமான அல்லது மருட்சியான மனக்காட்சி களைப் பெறுவர். இச்செய்திகளைத் தொடர்ந்து பெறுமொழி வாசகர் படிக்கும்போது ஆங்காங்கு புரிதலுணர்வு தடைபட்டு நூலின் ஓட்டத்தோடு இணையமுடியாமல் அவரை இச்செய்திகள் அயன்மைப்படுத்திவிடும். இதனால் பண்பாட்டுக் கூறுகளை மொழிபெயர்ப்பதில் ஆசிரியர்கள் மிகுந்த அக்கறையும் கவனமும் கொள்வர்.

## மொழிபெயர்ப்பின் இடர்ப்பாடுகள்

பண்பாட்டுச் சிக்கலைப்பற்றி நைடா பின்வருமாறு கூறுகிறார்: ''பண்பாட்டுக் கூறுகளை முறையாக மொழிபெயர்க்காவிட்டால் அம்மொழிபெயர்ப்பைப் படிப்போர் அச்செய்திகளைத் தவறாகப் புரிந்துகொள்வர். மொழிபெயர்ப்புப் பொருளற்ற செய்தியாகத் தோற்றமளிக்கும்'' பண்பாட்டுச் செய்திகளை விளக்கமாகக் கூறுவதனால் சராசரி வாசகருக்குச் 'செய்திப் பெருக்கம்' (over load) காரணமாக படிப்பின் ஓட்டத்தில இடையூறு

ஏற்படும் பொருள் விளங்காத மாறுபட்ட பண்பாட்டுச் செயற்பாடுகளுக்குத் தீர்வு ஒன்றையும், நைடா வழங்கியுள்ளார். விளக்கக் குறிப்பு தருவதனால் பண்பாட்டுக் கூறுகளைப் பெறுமொழி வாசகருக்கு முறையாகப் புலப்படுத்த இயலும். சிறப்பான வரலாற்றுச் சூழல்களோடு தொடர்புடைய பண்பாட்டுச் செய்தியை அதே பக்கத்திலும், பொதுவான பண்பாட்டு விளக்கங்களைப் பிற்சேர்க்கையிலும் தரவேண்டும் என்று நைடா கூறியுள்ளார்.

## இலக்கியம் காட்டும் 'கற்பு'

'கற்பு' என்ற பண்பாட்டுக்கூறு பண்டைக் காலத்தில் திருமணத்திற்குப் பிறகு உள்ள ஒழுக்கமாகத் தொல்காப்பியத்தில் (கற்பியல்) கூறப்பட்டுள்ளது. பரத்தையிற் சென்ற தலைவனோடு தலைவி ஊட நேர்ந்தாலும் பின்னர் ஏற்றுக் கொண்டதாகவே பாடல்கள் காட்டுகின்றன. தலைவனைக் கற்பிழந்தவன் எனக் குற்றஞ்சாட்டிய நிலை காணப்படவில்லை. கலித்தொகை 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என விளக்குகிறது. இதற்கும் பிந்திய காலத்தைச் சேர்ந்த சிலப்பதிகாரம் கற்புடை மகளிரை உலகமே போற்றும் என்று அப்பண்பிற்குத் தெய்வீக மதிப்பினை அளித்துள்ளது. பிற்காலத்தில் புராணங்கள் தோன்றிய போது 'நிழல்படா கற்பு' 'நெஞ்சு புகாக் கற்பு' என்று கணவனைத் தவிரப் பிற ஆடவரின் நிழல் கூட ஒரு பெண்ணின்மீது விழக்கூடாது எனவும் பிறர் நெஞ்சில் இடம்பெறுவதால் கற்புத்திறம் குறைபடும் என்றும் கருதப்பட்டது. இப்பின்னணியில் ஆராய்ந்தால் கற்பு பெண்களுக்கே உரிய பண்பு என்பதும் மணவாழ்விற்கு அடிப்படையானது என்பதும் பெறப்படும்.

## கற்பு—அகராதி விளக்கம்

தமிழ் மொழி அகராதி கற்பெனும் சொல்லுக்குப் பின்வரும் பொருள்களைத் தந்துள்ளது ; ஆங்கில மொழிபெயர்ப்புகளையும் அளித்துள்ளது :

கற்பு : Conjugal fidelity, chastity

1. பதி விரதா தருமம்
2. களவுக் கூட்டத்துக்குப்பின் தலைவன் தலைவியை விதிப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம் (நம்பி. 26)
3. முல்லை (An emblem of female chastity)
4. கல்வி (Learning, Study, Knowledge)
5. தியானம் (Meditation)
6. வேலைப்பாடு (Workmanship)

இவை தவிரத் தமிழ் – ஆங்கில அகராதியில் (J. P. Fabricius) கீழ்க்காணும் வேறு பொருள்களும் தரப்பட்டுள்ளன.

கற்பு : 1. Chastity, female virtue
2. Fitness, Prosperity (முறைமை)
3. Fortification (மதில்)

கற்புடைமை — Female chastity

கற்பெனும் சொல் 'கல்' என்ற அடிச்சொல்லிலிருந்து தோன்றியது. கல் திண்மையானது என்பதனால் அதன் வழிப் பிறந்த கற்பிற்கும் 'கற்பெனும் திண்மை' என்றும் 'திறம்பாமை' என்றும் விளக்கம் தரப்பட்டது. கற்பிக்கப்-படுவது கற்பு என்றும் கூறுவர். தியானம் என்பது மனத்தை ஒருமுகப்படுத்தலாகும். மதில் என்பதும் பிறர் உட்புகா வண்ணம் கட்டப்பட்ட தடுப்புச்சுவர் ஆகும். 'சிறை காக்கும் காப்பு' என்ற வள்ளுவர் கூற்று இவண் நோக்குதற்குரியது. எனவே அகராதி கூறும் பொருள்களெல்லாம் ஒரே கருத்தினை உடையன என்பதை அறியலாம்.

கற்பினை Female chastity, Female virtue என விளக்கி யிருப்பது அப்பண்பின் தனித்தன்மையைக் காட்டுகிறது.

## பாரதி பாடிய 'கற்பு நிலை'

பாரதியார் கற்பெனும் இப்பண்பு ஆண், பெண் இருவருக்கும் பொதுவானதாக இருக்க வேண்டும் என்று பாடியுள்ளார். மொழிபெயர்ப்பாசிரியர்கள் இப்பாடல் வரிகளை,

'They talked of **Chastity,** Sisters
Chastity is good for both'

'And they talk **Wedded faith**
Good let it be binding for both'

என்று மொழி பெயர்த்துள்ளனர் கற்பிற்கு 'Chastity' என்றும் 'Wedded faith' என்றும் இரண்டு வகை மொழிபெயர்ப்புக்கள் காணப்படுகின்றன.

'Chastity' என்ற சொல்லுக்குச் சமூகவியல் அடிப்படையிலும் 'Faith' என்பதற்குச் சமய அடிப்படையிலும் பொருள் கூறப்படுகிறது. 'chaste' என்பதன் மூல வடிவம் 'castus' எனப்படும் இலத்தீன் சொல்லாகும். இது இலத்தீனில் 'தூய்மை' என்ற பொருளைக் குறித்தது. குறிப்பாக, தங்கள் இனத்திற்குத் தூயவர்களாய் இருத்தலைக் குறித்தது.

## Chastity—சொல்லும் பொருளும்

'Chaste' என்ற சொல் 'Caste' (இனம், ஜாதி) என்ற சொல்லிலிருந்து தோன்றியது. இதன் மூல வடிவம் போர்த்துகீசிய மொழியைச் சேர்ந்த 'casta' என்பது. 'casta' என்றால் கலப்படமில்லாத. உறுதியான (Unmixed, Strictly) என்று பொருள். இலத்தீனில் வழங்கிய 'castus' என்ற சொல்லின் பெண்பால் வடிவம், 'casta'. இச்சொல் கடன்சொல்லாகப் போர்த்துகீசிய மொழியில் வழக்குப்பெற்றது. 'Castus' என்ற இலத்தீன் சொல்-சமயச் சடங்குகளிலும் விதிமுறைகளிலும் உறுதியாக இருத்தலைக் குறித்தது. இன்றும் கத்தோலிக்கச் சமயத்தினர் 'சமயத்தூய்மை' (Religious Purity) என்ற பொருளில் இதனை வழங்கி வருகின்றனர்.

வரலாற்றுக்கு முந்திய காலத்தில் சமயச் சடங்குகளில் பங்கு பெறுவோர் ஒரு குடும்பத்தையோ, ஒரு குழுவையோ சேர்ந்தவராக இருந்தனர். இவர்களுக்குப் பொதுவான விதிமுறைகள் விதிக்கப்-

பட்டிருந்தன. எனவே, இக்குழுவினர் தம் குழுவிற்கு (சாதி, இனம் போன்றவற்றிற்கு) உண்மையாக இருப்பதனை 'castus' என்ற சொல் குறித்தது. இம்முறையில்தான் இச்சொல்லில் இருந்து 'caste' என்பதும் உருவாகியது.

சடங்குகளில் பங்குபெறும் உரிமை பெற்ற ஒரே குழு அல்லது இனத்தைச் சேர்ந்த மக்கள் மற்ற இனத்தவரோடு அவர்களின் சமயச்சடங்குகளில் கலந்துகொள்வதில்லை. இப்பழக்கத்தைத் 'தூய்மை' (Pure) 'உறுதியான' 'கலந்து விடாத' போன்ற அகராதிப்பொருள்கள் உணர்த்துகின்றன. பிற இனத்தவரோடு பாலியல் நெறியிலான உறவு கொள்வதனை அவர்கள் தடை செய்திருந்தனர். மண உறவு விலக்கப்பட்டிருந்தது. பிற இனத்தவரோடு பாலுறவு கொள்ளாமலிருப்பதை அறமாக (தமிழ் அகராதிகள் கூறுகின்ற பதிவிரதா தருமமாக) 'Virtuous', sexually chaste எனக்கொண்டனர். இதனால் சமயத்தையும், பிற சமூகப் பழக்க வழக்கங்களையும் பாதுகாக்க முடியும் என்ற பண்டைய மக்கள் நம்பினர்.

'Chastity' என்ற சொல்லின் பொருள் வரலாறு, சமயச் சடங்குகளில் பங்கு கொள்கின்ற, சமய விதிமுறைகளுக்குட் பட்ட — ஒரேகுழு / இனத்தைச் சேர்ந்த (caste) — பிற இனத்தவரோடு தொடர்பு கொள்ளாத — குறிப்பாக பாலியல தொடர்பற்ற — தனி மனித ஒழுக்கம் என்று — பொதுப்பண்பி லிருந்து தனிப் பண்பாகப் பரிணமித்துள்ளது. கூட்டத்திற்கு உண்மையாக இருத்தல் அல்லது அதன் தூய்மையைக் காத்தல் எனும் பண்பு பின்னர் குடும்பத்தின் தூய்மையாக மாறியுள்ளது.

சமஸ்கிருதச் சொல்லான 'cistas' என்பதும் 'castus' என்ற சொல்லுடன் தொடர்புடையதாகும். சமஸ்கிருதத்தில் இச்சொல் 'நன்கு கற்பிக்கப்பட்ட', 'நன்கு பயிற்சிபெற்ற என்ற பொருள்களில் வழங்குகிறது.

இலத்தீனில் வழங்கிய 'castus' பல வடிவங்களைப் பெற்றுள்ளது. போர்த்துக்கீசியத்தில் 'casta' என வழங்கப் பெற்றது. அதன் அண்டை நாடான ஸ்பெயினில் 'castitat'

என வழங்கப்பெற்றது. ஸ்பெயினுக்கு அருகேயுள்ள பிரான்ஸ் நாட்டில் 'chastete' என்று வழங்கியது, பழைய பிரெஞ்சு (Old French) மொழியிலிருந்து பழைய ஆங்கிலத்திற்கு இச்சொல் மாறிச் சென்றது.

'castus' என்பதுடன் தொடர்புடைய 'castigare' என்ற இலத்தீன வடிவம் 'துரத்து / விரட்டு' என்ற பொருளில் வழங்கியது. இச்சொல் குழுவிற்கு / இனத்திற்கு உண்மையல்லாதவரைத் திருத்தும்பொருட்டு (to correct) தண்டனை (punish) அளிப்பதனைக் குறித்தது. பிரெஞ்சு மொழியில் castigare, chastier (பழைய பிரெஞ்சு) chatier (புதிய பிரெஞ்சு) என்று வழங்கியது. புதிய ஆங்கிலத்தில் 'chastien' என்றும், பின்னர் 'chasten' என்றும் இடம்பெற்றது. ஆங்கிலத்தில் 'castigate' என்ற சொல் தண்டனை அளிப்பதனையும் கடுஞ்சொற்களால ஏசுவதனையும் குறிக்கிறது. விதிகள் ஏற்படுத்தப்படும்போது விதிமீறல்களுக்கான தண்டனைகளும் உருவாகின்றன.

சடங்கு, குழு, கட்டுப்பாடு, தண்டனை என பல்வேறு பரிமாணங்களைப் பெற்ற 'castus' என்ற சொல் எதிர்மறைப் பொருளைத் தரும் பொருட்டு in- என்ற முன் ஒட்டைப்பெற்றது. இதனால் 'in cestus' என்ற சொல் உருவாகி, 'தூய்மையற்ற' (impure) என்ற பொருளில் வழங்கியது. 'castus' என்பது '(இனத்திற்கு) உண்மையான, தூய்மையான' என்ற பொருளிலும் 'Incestus' 'இனத்திற்கு ஒவ்வாத', 'தூய்மையற்ற' என்ற பொருளிலும் வழங்கியது. இதன் அடிப்படையில் ஆங்கிலத்தில் 'incest' என்னும் சொல், 'இனத்திற்கு ஒவ்வாத' 'இனத்திற்கு ஏற்றுக் கொள்ளாத மண உறவுகளைக் குறித்தது. Chastity என்பது சமூகம் ஏற்றுக்கொண்ட பாலுறவையும் 'incest' சமூகம் விலக்கிய பாலுறவையும் குறித்து வருகிறது.

ஆக, ஆங்கிலச்சொல் பொதுப்பண்பினை விலக்கி தனிப் பண்பாகக் கொண்டு வழங்கி வருகின்ற இக்காலத்தில் 'chastity' என்பது 'conjugal fidelity' என்பதனைத் தம் மையக் கருத்தாகக் கொண்டுள்ளது. மரபுத் தொடர்களில்

இடம்பெறும்போது chaste என்பது 'தூய்மை' என்ற பொருளினைக் கொண்டிருந்தாலும் தனிச் சொல்லாக வருமிடங்களில் பண்புச் சொல்லாக பாலுறவுத் தடையைக் குறித்து வருவது தெளிவு.

## கற்பும் தூய்மையும்

உயர்தனிச் செம்மொழியாகப் போற்றப்பட்ட கிரேக்கத்தில் 'கற்பு' எனும் பண்பினைக் குறித்த தனிச்சொல எதுவும் இல்லை. Hagnos αγνες எனும் கிரேக்கச் சொல் 'தூய்மை' என்ற பொருளில் வழங்கியது. இச்சொல சூழலுக்கேற்பக் கற்பெனும் பண்பையும் குறித்துள்ளது. குறிப்பிட்ட சொல் வழக்கு இல்லை என்பது அப்பண்பாடும் அந்நாட்டில் இல்லை என்பதையே விளக்குகிறது.

## மரபுத்தொடர்கள்

மணவாழ்க்கைக்குரிய சட்டமாகக் 'கற்பு' வரையறுக்கப்பட்டாலும் ஆங்கிலத் தொடர் வழக்கில் இச்சொல 'தூய்மையான' என்ற பொருளில் வழங்கி வருகின்றது. 'Chaste English' என்ற மரபுத்தொடர் பிறமொழிச் சொற்கள் கலவாத, தூய ஆங்கிலத்தைக் குறிக்கும். ஆனால் அகராதிகளில் 'தூய்மை' என்பதனைக் காட்டினும் நடைமுறையில் வழங்கிய 'abstaining from unlawful or immoral (also from all) sexual intercoures' 'Pure in thought, word and deed' .especially sexually pure' என்ற கருத்திற்கு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது.

தற்கால ஆங்கிலத்தில் (Modern English) Chastity' வழங்கப்படும் முறையை நினைவிற்கொண்டு 'கற்பினை' chastity யாக ஒரு மொழிபெயர்ப்பாசிரியர் மொழிபெயர்த்திருக்கிறார், மற்றொரு மொழிபெயர்பபாசிரியர் 'Wedded faith' என மொழிபெயர்த்திருப்பது ஆய்விற்கு உரியது. ஏனெனில் 'faith' எனும் வழக்கு சமூகம், பண்பாடு சார்ந்தது அன்று; சமய வழக்காகும். இதன ஆகராதிப் பொருள் 'ஆதாரமில்லாமல் நம்புவது' ஆகும். இதனால் கடவுள் நம்பிக்கையை இச்சொல்லால் குறிப்பிட்டனர். weddedfaith என்பது திருமணத்திற்காக ஏற்பட்ட நம்பிக்கையைக் குறிக்கிறது.

மணந்தவனின் நம்பிக்கைக்கு உரியவளாய் மனம், மொழி, செயல் ஆகிய மூன்றிலும் ஒன்றாய் இருப்பதனை இத்தொடர் விளக்குகிறது எனக்கொள்ளலாம். இப்பண்பினைப் பெண்களுக்கே உரியதாகக் கொள்ளாமல் இரு பாலாருக்கும் பொதுவாகக் கொள்வதற்கும் இம்மொழிபெயர்ப்பு உதவுகிறது, 'faith' என்பது பாலுறவு தொடர்பான தூய்மையை மட்டும் குறிக்கவில்லை. ஆனால் Chastity, incest ஆகியனபாலுறவுத் தொடர்புகளுக்கான விதிமுறைகளுக்குட்பட்டன.

## வகைமை காட்டல் (Classifier)

பண்பாட்டுச் செய்தியை மொழிபெயர்க்கும்போது அதற்குரிய இணையான வடிவம் கிடைக்கப்பெறாத நிலையில் பொதுப் பண்பினைச் சுட்டி, பின்னர் குறிப்பிட்ட பண்பாட்டுக்கூறு எவ்வகையான சிறப்புப் பணியினைப் பெற்றிருக்கிறது என்று விளககுவதனை நைடா 'Classifier' என்பார். வகைமை காட்டலை மொழிபெயர்ப்பு உத்திகளுள் ஒன்றாகக் கூறலாம்.

'Wedded faith' என்ற மொழிபெயர்ப்பில் 'வகைமை காட்டல், எனும் முறை இடம் பெற்றுள்ளது. 'Faith' என்பதுபொதுவானது, ஆனால் 'Wedded faith' என்பது இந்நம்பிக்கை திருமணத்தோடு தொடர்புடைய நம்பிககை என்பதனை உணர்த்துகிறது. கணவனின் நம்பிக்கைக்கு உரியவளாக மனைவியும் மனைவியின் நம்பிக்கைக்கு உரியவனாகக் கணவனும் மன உறுதிப்பாட்டுடன் இருப்பதனை 'wedded faith' விளக்குகிறது, மூல நூலாசிரியரான பாரதியார் புலப்படுத்திய 'கற்பு நிலையை' Chastity, wedded faith அக்கற்பு நிலையில் நெருங்கிய நிகரனாக (the closest equivalent) இருப்பதனை உணரலாம்.

தூய்மை, உறுதிப்பாடு என்ற பொருளை உணர்த்தும் Chastity, faith ஆகிய சொற்கள் ஒரே பொருட்களத்தைச் (Semantic field) சேர்ந்தனவாயினும் 'wedded faith' என்பது கற்பெனும் பண்பாட்டுக் கூறினுடைய தனித்தன்மையை (specific form) புலப்படுத்தியிருக்கிறது. மற்றொரு மொழி பெயர்ப்பாளரான எஸ். இராமகிருஷ்ணன் 'கற்புநிலையை'

Conjugal fidelity என மொழிபெயர்த்திருப்பது 'Wedded life உடன் ஒப்புநோக்கற்குரியது. 'Chastity' பொதுவாக (Generic Form) விளக்கியிருக்கிறது. 'Faith' என்பதற்கு 'பற்றுறுதி' என்ற கிறித்துவத் திருமறை மொழிபெயர்ப்பையும் இவண் ஒப்பிடலாம். ஒருவரிடத்து ஒருவர் கொள்ளும் பற்றுறுதி அல்லது விசுவாசம் Faith, Chastity, கற்பு என்ற பண்பாட்டுக் கூறாகப் பரிணமிக்கிறது. இவ் இரு ஆங்கிலச் சொற்களும் சமயப் பின்புலமுடையனவாதலால் இரண்டும் ஒரே பொருட்களத்தில் அமைகின்றன. ஆனால் மூல நூலாசிரியரின் மனக்கருத்தினைப் புலப்படுத்துவதற்கேற்ற சொல்லை மொழி பெயர்ப்பாசிரியர் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் 'கற்பு' என்னும் திண்மையை, உறுதியான மனப்போக்கு (மண வாழ்வில்)என்ற பொருளைத் தரும் 'Wedded Faith' இல் காணலாம்.

## முடிவுரை

பண்பாடும் மொழியும் இணைந்திருப்பதாலும் காலமும் கருத்தும் மாறி வருவதனாலும் பண்பாட்டுக் கருத்துக்களை மூலமொழி சாராத முற்றிலும் வேறோர் இனத்தைச் சேர்ந்த பெறுமொழியில் மொழிபெயர்த்து அளிப்பது சிக்கலான பணியாகும். இந்நிலையில் மூலநூல் ஆசிரியரின் காலமும் சூழலும் அவருடைய மனக்கருத்தும் பெறுமொழி வாசகருக்கு வேறுபட்டவையாகத் தோன்றும். ஆயினும் மொழிபெயர்ப்பாசிரியருக்கு மூலநூல் தரும் பண்பாட்டுச் செய்தியினை ஆழமும் அழுத்தமும் மாறாமல் தர வேண்டிய கட்டுப்பாடும் உண்டு. பெறுமொழியில் தக்க சொல் இல்லாவிட்டாலும் தகுதியானவை எனக் கருதக்கூடிய பல சொற்கள் காணப்படும். இந்நிலையில் நெருங்கிய நிகரன் வடிவத்தைப் பெறுவதற்காக, இதன் மூலம் மூலநூல் வாசகர் பெற்ற உணர்வை மொழிபெயர்ப்பினைப் படிப்பவருக்கும் ஊட்டுவதற்காக சொற்களைச் சேர்த்துப் (Wedded faith) புதியவற்றை உருவாக்கலாம். இச்சொல்லாக்கம் பொருட்களின் சிக்கலைத் தவிர்த்துப் புரிதிறனை விரிவாக்கும்.

# முல்லைப்பாட்டு மொழிபெயர்ப்புகள் - ஓர் ஒப்பாய்வு

மொழிபெயர்ப்புகள் இரண்டு வகையில் தோன்றுகின்றன. முதல்வகை, மூலநூலைப் பெறுமொழி வாசகர்கட்கு அறிமுகப் படுத்தும் நோக்கில் செய்யப்படுவது; இரண்டாம் வகை ஏற்கனவே மொழிபெயர்ப்புகள் இருந்தாலும் அவற்றினும் சிறந்ததாக ஒன்றைத் தரவேண்டும் என்ற நோக்கில் மேலும் ஒரு மொழி பெயர்ப்பைத் தருவது, இவ்விரண்டு தன்மையினையும் இக் கட்டுரை முல்லைப்பாட்டு மொழிபெயர்ப்பின் துணைகொண்டு ஆராய்கிறது,

முல்லைப்பாட்டுக்கு வெவ்வேறு காலகட்டங்களில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்புகள் தோன்றியுள்ளன. 1946இல் ஜே.வி. செல்லையாவும் 1978இல் என். இரகுநாதனும் பத்துப்பாட்டிலக் கியங்களை மொழிபெயர்த்துள்ளனர். உரைநடையாக சோம சுந்தரம்பிள்ளையும் (1959), தெ. பொ. மீ. அவர்களும் மொழி பெயர்த்துள்ளனர். அண்மையில் 1980இல் ஏ.வி. சுப்பிரமணியன் புதுக்கவிதை முறையில் (Blank Verse) மொழிக்கட்டாகச் (Trans-composition) செய்துள்ளார். இவற்றுள் முதலிரண்டு மொழிபெயர்ப்புகள் மட்டும் ஆய்வுப் பொருளாக அமைகின்றன.

## முதல் மொழிபெயர்ப்பு

ஜே.வி. செல்லையா, தாம் முல்லைப்பாட்டை மொழிபெயர்த் தற்குக் காரணமாகிய இரண்டு நோக்கங்களை நூலின் முன்னுரையில் தெரிவித்துள்ளார் :

1. நம்முடைய வளமையான பாரம்பரியத்தைப் பிறருடன் பகிர்ந்துகொள்ள வேண்டிய கடப்பாடு.

2. படித்த தமிழர்கள் பலரும் சங்க இலக்கியம் பற்றி அறியா திருத்தலால் அவர்கட்கு இவ்விலக்கியத்தை அறிவித்தல்.

ஆகவே இந்நூல் மூலத்தை அறிமுகப்படுத்தும் இயல்பினது.

இதனால் இவர் மூல பாடத்தின் ஒவ்வொரு சொல்லையும் மொழிபெயர்த்திருக்கிறார். தம்முடைய சொற்கள் கூடுதலாகச் சேர்ந்துவிடக்கூடாது என்பதிலும் கவனமாக இருந்திருக்கிறார். மூலநூலைப் படித்துப் புரிந்துகொள்வதற்கு இம்மொழிபெயர்ப்பு உதவியாக அமையக்கூடும் என்றும் கருதியுள்ளார்.

## இரண்டாம் மொழிபெயர்ப்பு

என். இரகுநாதன் மொழிபெயர்ப்பின் முன்னுரையில் தம் நோக்கத்தைத் தெரியப்படுத்தியுள்ளார். இருபதாண்டுகளுக்கு முந்தைய சங்க இலக்கிய மொழிபெயர்ப்புகளைப் படித்த பின்னர் உண்மையான மரபுத்தொடர் மொழிபெயர்ப்பைத் (Idiomatic and Faithful Translation) தரவேண்டும் என்ற நோக்கத்தில் இந் நூல் மொழிபெயர்க்கபபட்டது என்கிறார். இதனால் தற்சார் பின்மையையும் துல்லியத்தன்மையையும் தாம் போற்றியிருப்ப தாகவும் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பாகத் தரவில்லை என்பதையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

இம்மொழிபெயர்ப்பு, முதலில் ஒரு மொழிபெயர்ப்பு இருக்க அதனினும் சிறப்பாகத் தாம் வேறொன்றைப் படைத்தளிக்க வேண்டும் என்ற அடிப்படையில் தோன்றியுள்ளது.

இவ்விருவகை மொழிபெயர்ப்புகளுக்கிடையே காணப்படும் கொள்கை மாற்றம், மொழிபெயர்ப்பியல் வரலாற்றிலும் ஆய்வு நெறியிலும் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. நைடா எனும் மொழிபெயர்ப்புத் திறனாய்வாளர் சொல்லுக்குச் சொல் மொழி பெயர்ப்பதனைப் பழைய நோக்கு என்றும் உண்மையான மரபாக்க மொழிபெயர்ப்பைப் புதிய நோக்கு என்றும் விளக்கி யுள்ளார். பழைய நோக்கை உருவ இசைவு என்றும், புதிய நோக்கை இயக்கநிகர்மை என்றும் விளக்கியுள்ளார். மூலமொழிச் செய்தியைப் புரிந்துகொள்வதற்கு உருவ இசைவும், உணர்ந்து கொள்வதற்கு இயக்கநிகர்மையும் உதவுகின்றன. ஜே.வி. செல்லை யாவின் மொழிபெயர்ப்பு உருவ இசைவையும், என். இரகு நாதனின் மொழிபெயர்ப்பு இயக்க நிகர்மையையும் தம் நோக்க மாகக் கொண்டுள்ளன. முதல் மொழிபெயர்ப்பைக் காட்டிலும் சிறப்பான மொழிபெயர்ப்பைத் தருவதில் இரண்டாம் மொழி

பெயர்ப்பு மேற்கொண்டுள்ள முறைகளும் எதிர்கொண்டுள்ள சிக்கல்களும் ஒலியனியல், உருபனியல், தொடரனியல் முறைகளாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

மூலநூலின் செய்யுள் வரிகள் மொத்தம் 105. முதல் மொழிபெயர்ப்பில் இவை 134 ஆக இருக்க, இரண்டாம் மொழிபெயர்ப்பு 109ஆக மாற்றியிருக்கிறது. இயன்றவரை மூலநூலின் நீளத்தை மீறக்கூடாது என்பதில் தாம் மிகக் கவனமாக இருந்ததாக என். இரகுநாதன் குறிப்பிட்டுள்ளார்.

## 1. ஒலியனியல் முறைகள்

முல்லைப்பாட்டில் காணப்படும் பெயர்ச்சொற்களை இரண்டு மொழிபெயர்ப்பாளர்களும் ஒலிபெயர்ப்பாகக் கொடுத்துள்ளனர். அவை :

| மூலமொழி | ஜே.வி.செல்லையா | என்.இரகுநாதன் |
|---|---|---|
| முல்லை | Mullai | Mullai |
| பிடவம் | Pidvam | Pidava |
| யவனர் | Yavanas | — |
| மிலேச்சர் | Mlechas | Ionians |
| காயா | Gaya | Kaya |
| கொன்றை | Konrai | Collyrium-Black |
| காந்தள் | Kanthal | White Kāndal |
| தோன்றி | Thonri | Kāndal red |
| வள்ளி | Valli | — |

முதல் மொழிபெயர்ப்பைக் காட்டிலும் இரண்டாம்மொழிபெயர்ப்பில் இரண்டு வகையான சிறப்பு முறைகள் இடம் பெற்றுள்ளன.

அ. ஒலிக்குறியீடுகளை இடுதல்—உ-ம் Kāya, Kandal

ஆ. இணையான ஒலிகளைத் தருதல்—எ.ம் : Kaya,

### அ. ஒலிக் குறியீடுகளை இடுதல்

Kāya, Kāndal போன்ற ஒலிபெயர்ப்புச் சொற்களில் ஒலிக் குறியீடுகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் a நெடில் குறியீடு இடப்பெறுதற்குக் காலப்போக்கில் ஏற்பட்ட மொழியியல் வளர்ச்சியே காரணமாகும்.

### ஆ. இணையான ஒலிகளைத் தருதல்

'காயா' என்பதன் முதல் ஒலி கடையண்ண ஒலிப்பிலா வெடிப்பொலியாக இருக்க இதனை ஒலி பெயர்க்கும்போது கடையண்ண ஒலிப்புடை ஒலியான 'g' வாக ஜே.வி. செல்லையா ஒலி பெயர்ப்புச் செய்திருக்க, என். இரகுநாதன நிகரான ஒலிப்பிலா ஒலியைத் தந்திருக்கிறார்.

'காந்தள்' எனும் பெயரில் வரும் 'த' மெல்லின தந்நகரத்துடன் இணைந்து ஒலிப்புடை ஒலியாக ஒலிக்கிறது. இதற்கு முதல் மொழிபெயர்ப்பில் 'th'ஐ பயன்படுத்தியிருக்க மொழி பெயர்ப்பில் பயன்படுத்தியுள்ளனர். இதுவும் உண்மையான மொழிபெயர்ப்பைத் தரும் முயற்சிகளுள் ஒன்றாகும்.

இரண்டாம் மொழிபெயர்ப்பில் வேறு சில மாற்றங்களும் சிறப்பாக்க முயற்சிகளாக இடம்பெற்றுள்ளன. அவை :

1. இணையான ஆங்கிலப் பெயரைத் தருதல்
2. இயல்பு சுட்டல்

கொன்றை மலருக்கு 'Collyrium black' என்று அதன் இணையான ஆங்கிலப் பெயரைத் தந்துள்ளார். பிற தாவரப் பெயர்களுக்கு இணையான ஆங்கிலப்பெயர் கிடைத்தில என்று கூற வியலாதெனினும் இவ்வொன்றனுக்கு மட்டுமாவது இவ்வாறு கொடுத்தது குறிப்பிடத்தக்கது.

**இயல்பு சுட்டல் :**

'காந்தள்' என்னும் சொல் மூலநூலில் காணப்படாதிருக்க உரையின் துணையால் அதனையறிந்து ஒலிபெயர்ப்புச் செய்துள்ளார். White Kandal, Kandal red என்று அவற்றின் இயல்பு சுட்டி ஒலிபெயர்த்திருப்பதும் நினைவுகூரற்குரியது.

'தோன்றி' என்பதனை முதல் மொழிபெயர்ப்பு 'Thonri' என்று ஒலிபெயர்ப்பாகக் கொடுத்திருக்க, இரண்டாம் மொழிபெயர்ப்பு அதன் வண்ணத்தைச் சுட்டி 'Kandal red' என்று கூறியுள்ளது.

இரு மொழிபெயர்ப்புகளும் வரகினை மட்டும் 'ragi' என்று மொழிபெயர்த்துள்ளன.

'நகைதாழ் கண்ணி', 'தேம்பாய் கண்ணி' என்பனவற்றை முதல் மொழிபெயர்ப்பு Wreaths, Worthy garlands என்று மொழி பெயர்த்திருக்கிறது. இவற்றுள் 'Wreaths' கண்ணி எனப்படும் தலைமாலையைக் குறிக்க, 'Garlands' என்பது கழுத்தில் அணியப் படும் மலர்மாலையைக் குறித்துள்ளது.

இரண்டாம் மொழிபெயர்ப்பு இவ்விரண்டினையும் 'Vanji' என்று ஒலிபெயர்ப்பாகக் கொடுத்துள்ளது. முல்லைக்குரிய புறத்திணை வஞ்சியாதலின், முல்லைத்திணைத் தலைவன் அணியும் மாலையும் வஞ்சி எனக் கொண்டு என். இரகுநாதன் இதனை ஒலிபெயர்ப்புச் செய்துள்ளார். நைடா இத்தகைய சிக்கலை ஆராயுங்கால் 'மூலபாடத்தைப் பற்றிய கூடுதலான அறிவே' (ப. 99) இதற்குக் காரணம் என்பார். மூலமொழியாளர் மொழிபெயர்ப்புச் செய்யும்போது இச் சிக்கல் தோன்றுகிறது.

முதல் மொழிபெயர்ப்பில் காணப்படும் சமஸ்கிருத ஆக்கத் தைக் காலத்தின் விளைவு என்று கூறலாம்.

உரையின் உதவியால், மூலநூலில் இல்லாத சொல்லை அல்லது பெயரை ஒலிபெயர்த்துள்ளார்.

மொழிபெயர்ப்பாசிரியர் மூலமொழி பேசுவோராக இருப்ப தனால் தம் இலக்கண, இலக்கிய அறிவை மொழிபெயர்ப்பில் புகுத்திவிடும் சிக்கல் உருவாகிறது,

**உருபனியல் முறைகள்**

மரபுச் சொற்கள், வழக்குச் சொற்கள், உறவுமுறைச் சொற்கள், பெயர்ச்சொற்கள், கலைச்சொற்கள் ஆகியவற்றை மொழிபெயர்ப்பதில் சிக்கல்கள் உருவாகின்றன என்பார் சண்முக, வேலாயுதம். இவற்றில் முதல் மொழிபெயர்ப்பிலிருந்து

இரண்டாம் மொழிபெயர்ப்பு சில மாற்றங்களையும், புதிய முறைகளையும் புகுத்தி உள்ளது.

**1. இயற்பெயர்களை ஒலி பெயர்க்காமல் மொழிபெயர்ப்பாகத் தரல்**

முல்லைப்பாட்டு இடையர் வாழ்க்கையைப் பற்றியதாதலின் இடையர் குலக் கடவுளான திருமாலும் திருமகளும் தொடக்கப் பகுதியில் மழைக்கு உவமையாக இடம்பெற்றுள்ளனர்.

''மாதாங்கு தடக்கைநீர் செலநிமிர்ந்த மால்போல''

என்ற வரியில் 'மா' என்பது திருமகளையும், 'மால்' என்பது திருமாலையும் குறிக்கின்றது.

| மூலமொழிச் சொல் | மொழிபெயர்ப்பு—1 ஜே.வி.செல்லையா | மொழிபெயர்ப்பு—2 என். இரகுநாதன் |
|---|---|---|
| 1. மா | Lakshmi | Mother of plent |
| 2. மால் | Vishnu | The Great God |

முதல் மொழிபெயர்ப்பு சமஸ்கிருத இணைப்பெயர்களைத் தந்திருக்க, இரண்டாம் மொழிபெயர்ப்பில் இணையான ஆங்கில மொழிபெயர்ப்பு பெயர் வடிவம் பெற்றுள்ளது.

நைடா, மொழிபெயர்ப்பு பற்றிய புதிய கோட்பாட்டை விளக்குங்கால் ஒரு மொழியில் சொல்லப்படும் எல்லாச் செய்தியையும் அவை செய்தியின் முக்கிய கூறாக இருக்குமானால் அதனை அடுத்த மொழியிலும் வெளியிட முடியும் என்று கருத்தை வலியுறுத்துவார்.

இக்கருத்திற்குச் சான்றாகப் 'பனி போன்ற வெண்மை'யைப் (White as snow) பனியில்லாத நாடுகளில் வழங்கப்படும் மொழியில் மொழி பெயர்க்கும் போது 'மிக மிக வெண்மை' எனக் கூறி விளக்கலாம் என்பார். இதனை மா, மால் ஆகியவற்றின் மொழிபெயர்ப்புகளுடன் ஒத்துநோக்கலாம். மா, மால் ஆகியவற்றிற்கு நிகரான ஆங்கிலப் பெயர்கள் இல்லாதபோது அவற்றிற்கு இணையாக 'Mother of plenty' 'The Great God' என்று விளக்கமாகக் கொடுத்துவிடுகிறார் என். இரகுநாதன். இவ்விரண்டாம்

மொழிபெயர்ப்பு முதல் மொழிபெயர்ப்பில் காணப்பெற்ற சமஸ்கிருத ஆக்கத்தை (Sanskritisation) மாற்றிவிட்டது.

'படம்புகு மிலேச்சர்' என்ற வரியில் வரும் 'மிலேச்சர்' என்ற வடமொழிச்சொல்லை முதல் மொழிபெயர்ப்பு 'Mlechas' என்று ஒலி பெயர்ப்புச் செய்திருக்க, இரண்டாம் மொழிபெயர்ப்பு இணையான சொல்லைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் 'Ionians' என்று அவர்களின் இருப்பிடத்தைக் கொண்டு பெயரிட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

## சூழற்பொருளுக்கு முன்னுரிமை அளிக்காமை

(Priority of Contextual Consistency over Verbal Consistency is left)

மொழிபெயர்ப்பில் உருபனிலையில் சொற்பொருளைக் காட்டிலும் சூழற்பொருளை மொழிபெயர்ப்பதில் முன்னுரிமை அளிக்க வேண்டும் என்பது நைடா, காட்ஃபோர்டு ஆகியோரின் கருத்து. ஆனால் உண்மையான மொழிபெயர்ப்பைத் தரும் நோக்கத்தில் எழுதப்பெற்ற இரண்டாம் நூல் சொற்பொருளை அளித்ததனால் பாடல் தலைவன் அக இலக்கியத் தலைவனாக அன்றிப் புற இலக்கியத் தறைவனாக முக்கியத்துவம் பெறுகிறான்.

> ''வருதல் தலைவர் வாய்வது நீநின்
> பருவரல் எவ்வங் களை மாயோய்''

என்ற வரிகள் இருத்தலெனும் முல்லைத்திணை உரிப்பொருளை உணர்த்துவன. இவ்வரிகளில் சுட்டப்பெறும் 'தலைவர்' இப் பாட்டில் காதல் தலைவன் என்ற முறையில் தலைமைச் சிறப்பைப் பெறுகிறான். ''தெவ்வர் முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து வருதல் புறம் சார்ந்தாகும். புறத்திணையில் அவன் ஊர்த்தலைவனாக, படைத்தலைவனாகக் கொள்ளப் படுவான்.

முதல் மொழிபெயர்ப்பில் காணப்பெறும் 'spouse' Marriage, partner, consort, mate என்ற பொருட்களை உடையது என்பதனால் வாழ்க்கைத் துணை அல்லது காதல் தலைவனை

உணர்த்துகிறது. இங்கு, இச் சொல்லை மொழிபெயர்ப்பாசிரியர் பாடற்சூழலைக் கருத்தில் கொண்டு மொழிபெயர்த்துள்ளார் ஆனால் இரண்டாம் மொழிபெயர்ப்பில் அவ்வாறின்றித் தலைவனை 'Lord' எனப் பெயர்த்தெழுதியது கணவன் என்பதனைக் காட்டிலும் பெருமுது பெண்டிர் நோக்கில் அவனை ஊர்த் தலைவனாகக் கொண்டதனால் ஆகும். இரண்டாம் மொழி மெயர்ப்பில் இச்சிக்கல் ஏற்பட்டதன் காரணத்தைப் பின்வருமாறு விளக்கலாம்.

ஒரு சொல் சொற்பொருள் மட்டுமின்றிக் குறிப்பு பொருள் தருவதாக இருந்தால், அச்சூழலில் மூன்று கூறுகள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன என்பது நைடாவின் கருத்து.

1 கூற்று மாந்தர் தொடர்பு (Association with the speaker)
2. வழக்குச்சூழல் (Circumstances of Usage),
3 மொழியியல் அமைப்பு (Linguistic Setting),

இம்மூன்றின்வழி ஆராய்ந்தால் முல்லைப்பாட்டில் 'தலைவர்' எனும் சொல் 'வருதல் தலைவர் வாய்வது'' என்று வரும் விரிச்சி கேட்ட பெருமுது பெண்டிர் கூற்றில் இடம் பெற்றுள்ளது. இப் பெண்டிர் தலைவியிடம் தலைவன் வருகை குறித்துப் பேசும்போது,

'தெவ்வர், முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது'' (வரி 19-20)

எனறதனால் போரில் வெற்றி பெற்றுத் திரும்பும் அரசனைத் 'தலைவர்' எனக் குறித்ததாக மொழிபெயர்ப்பாளர் கருதியிருக்கலாம். இதனால் Lord எனும் சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறார் என்று கூறலாம்.

இவ்வாறு ஆராயுங்கால் கூற்று மாந்தர் தொடர்பும், வழக்குச் சூழலாகப் போர் முடித்துத் திரும்பும் செய்தியைக் கூறுதலும், மொழியியல் அமைப்பில் உயர்திணை ஒருமையில் 'அர்' எனும் சிறப்பு விகுதி பெற்றிருப்பதும் புலனாகின்றது. எனவே இரண்டாம் மொழிபெயர்ப்பு இச்சொல்லை அகத்திணை மாந்தராகக் கொள்ளாமல் புறத்திணையில் இடம்பெறும் போர்த்தலைவனாக மொழிபெயர்த்துள்ளது என்று கூறலாம்.

Spouse என்ற முதல் மொழிபெயர்ப்பு தலைவியின் நோக்கிலும் Lord என்ற இரண்டாம் மொழிபெயர்ப்பு கூற்று மாந்தரான விரிச்சி கேட்ட பெண்டிர் நோக்கிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. Spouse என்பது இருபாலுக்கும் பொதுவானதாக விளங்க இரண்டாம் மொழிபெயர்ப்பில் 'Lord எனும் ஆண்பாற் சொல்லைப் பயன்படுத்தியிருப்பதும் நோக்கத்தக்கது. Lord, Spouse என்பன ஒரே பொருட்களத்தினைச் சேர்ந்தன. (Semantic field) என்றாலும் இவற்றுள் Spouse என்பதனையே நெருங்கிய நிகரனாகக் கொள்ள முடியும்.

உருபனிலை மொழிபெயர்ப்பில் இரண்டாம் மொழிபெயர்ப்பு உண்மையான மொழிபெயர்ப்பைத் தரும் முயற்சியில் இணையான சொற்களைத் தேடியுள்ளது. மேலும் சொல்வோர், கேட்போர் என்று இரு நிலைகள் இருக்கும்போது, ஒரு சொல்லை இவ்விரு நிலைகளிலிருந்தும் நோக்கும் வாய்ப்பு உருவாகிறது. இதனால் ஏற்படும் சிக்கல் இருவேறு மொழிபெயர்ப்புகளை அளிக்கிறது.

மொழிபெயர்ப்புக்குரிய மூலநூல் பற்றி மிக்க கூடுதலான அறிவு இருக்குமானால் (Too much knowledge of the subject matter) நூற்கருத்தோடு தொடர்புடைய, ஆனால் நூலுடன் நேரடித் தொடர்பில்லாத கருத்துக்களும் செய்திகளும் மொழி பெயர்ப்பில் இடம் பெற்றுவிடும். இந்நிலையை இரண்டாம் மொழி பெயர்ப்பில் காணமுடிகிறது. 'Wreaths of Vanji' மற்றும் Lord என்பன புறத்திணைச் சார்பையும் அளிக்கின்றன. மூலநூலைக் காட்டிலும் மொழிபெயர்ப்பில் செய்திகளைக் கூடுதலாகச் சேர்ப்பதனைக் கவனத்துடன் தவிர்த்து விடவேண்டும். (Over loading of the translation should be carefully avoided' p. 30) என்ற நைடாவின் கருத்து இவண் நோக்குதற்குரியது.

### தொடரன் நிலை

மொழிபெயர்ப்பறிஞர் காட்ஃபோர்டு (Catford) கருத்தின்படி தொடர்களே மொழிபெயர்ப்புக்கு அடிப்படை அலகுகளாக அமைகின்றன. தமிழும், ஆங்கிலமும் வெவ்வேறு இனத்தைச் சேர்ந்த மொழிகளாதலின் அவற்றின் அமைப்பும் இலக்கணமும்

வேறுபடுகின்றன, இதனால் எழுவாயும் பயனிலையும் இடம் மாறி அமைவது இயல்பு, அவ்வாறு அமையுங்கால் இவ் இரண்டனுக்கும் இடையிலுள்ள அடைத் தொடர்களும் பிறவும் முற்றிலும் தலை கீழாக மாற்றமடைகின்றன. இந்நிலையை உவமைத்தொடரிலும் வருணனைத் தொடர்களிலும் காணமுடிகிறது.

முல்லைப்பாட்டின் முதற் பகுதியாகப் பொழுது வருணனை அமைந்துள்ளது. பெருமழை பெய்தற்குத் திருமாலின் வாமன அவதாரமும் பேருரு எடுத்தலும் உவமிக்கப்படுகின்றன. முல்லை நிலக் கடவுளான திருமாலின் வருணனை விளக்கமாக இடம் பெற்றுள்ளது. இவ்வுவமை தமிழிலக்கிய மரபின்வழி 'நனந்தலை உலகம்' எனும் மங்கல வழக்குத் தொடரால் தொடங்குகிறது. இத் தொடக்கம் ஆங்கில மொழிபெயர்ப்பில் காணப்படவில்லை.

''நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
நலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மா அல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செலவு எழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை''

என்ற இப்பாடற்பகுதியில் பின்வரும் கருத்துக்கூறுகள் காணப்படு கின்றன. உலகத்தை வளைத்தது, சங்கு சக்கரம் திருமகளோடு கூடிய திருமால், கடல் வருணனை, பருகுதல், வலஞ்சுழித்தல், மாலை ஏறுதல். விரைந்த செலவு, மேகம், பெருமழை, மாலைப் பொழுது.

முதல் மொழிபெயர்ப்பில் இக்கூறுகள் பின்வருமாறு மாறி அமைந்துள்ளன. மாலை, பெருமழை, மேகம் விரைந்த செலவு, பருகுதல், வலனேர்பு, திருமால், உலகம் வளைத்தல்.

| | |
|---|---|
| It's a short gloomy eve | The showers fall |
| சிறுபுன்மாலை | பெரும்பெயல் பொழிந்த |

From coluds　that travel fast　with water drunk
எழிலி　கொடுஞ்செலவு　பருகி

From the cloud, resounding sea　and use from hills
பாடிமிழ் பனிக்கடல்　கோடு கொண்டெழுந்து

With a turn to the right　as Vishnu　he who bears
வலனேர்பு　மால்　பொறித்த

In mighty hands　the disc　and right whorled chank
தடக்கை　நேமி　வலம்புரி

And Lakshmi　claps once　measured　earth's expanse
மா　தாங்கு　வளைஇ　நனந்தலை உலகம்

And rose with　water dripping from his hands
நிமிர்ந்த　நீர்செல

இம்மொழிபெயர்ப்பில் 'சிறுபுன்மாலை' எனும் தொடர் முதல் வரியில் 'Short gloomy eve' என்று அமைந்திருக்க, 'நீர்செல நிமிர்ந்த மால்' என்னும் உவமானப் பகுதி கடைசிவரியில் And rose with water dripping from his hands' என்று அமைந்திருக்கிறது.

முதற்பகுதி பொழுது வருணனை என்பதைப் பெறுமொழி வாசகர்கட்கு உணர்த்த விருப்பும் மொழிபெயர்ப்பாசிரியர், 'சிறுபுன் மாலை'யை முதற்கண் மொழிபெயர்த்திருக்கிறார். பிறகு மழை, அதற்குக் காரணமான மேகம், அதன் விரைவு, அஃது பனிக்கடல் பருகி வலஞ்சுழித்துக் கோடேறியமை ஆகியன கூறப்பட்டுள்ளன. அதன்பின் இக்காட்சி திருமாலை நிகர்த்தது என விளக்கப்பட்டுள்ளது. இவ் உவமைத் தொடர் மொழிபெயர்ப்பில் உவமான உவமேய அமைப்பு மாறி அமைந்துள்ளதன் காரணம் எளிமையாக்கமேயாகும்.

எளிமையாக்கம் பற்றி சண்முக. வேலாயுதம் கூறும்போது, "'ஒரு மொழிக்கருத்தினை மற்றொரு மொழியினருக்கு அறிமுகப் படுத்துதல் என்ற நிலையில் இது மிகுதியாக வேண்டப்படுகிறது'' என்று கூறுவது இவண் குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் மொழிபெயர்ப்பில் மேற்கூறியவாறு நேர்மாறான அமைப்பில் உவமான, உவமேயத் தொடர்கள் இடம்பெற வில்லை. மாறாகக் கீழ்க்காணும் முறையில் முதலில் திருமால் வருணனையும் பிறகு மாலை, எழிலி, கடல் பருகி கோடு கொண் டெழுதல், பொழிதல், விரைந்த செலவு, பெரும்பெயல் ஆகியன வும் இடம்பெற்றுள்ளன. இவ்வமைப்பும் மூலமொழியினின்றும் வேறுபட்டுள்ளது. மூலமொழியில் திருமால் வருணனைக்கு அடுத்து மேகம் நீர் பருகலும் பிறகு மழை பொழிதலும் கூறப் பட்டு, அத்தகைய மாலைப்பொழுது, என்று பொழுது வருணிக்கப் படுகிறது. இந்நிலை இவ் இரண்டாம் மொழிபெயர்ப்பில் காணப் பெறவில்லை.

As the Great God.. ...the water fell so on a dreary eve a cloud ... on the bowed earth in a great blast of rain என்ற அமைப்பில் இம்மொழிபெயர்ப்பு காணப்படுகிறது. இதனில் 'சிறுபுன்மாலை' என்ற பொழுது வருணனை முக்கியத்துவம் பெறாமல் மால் வருணனைக்கும் மழை வருணனைக்கும் இடை யில் மறைந்து விட்டது. இதனால் மூலமொழி வாசகர் பெற்ற காட்சிப் பின்னணியத்தைப் (Background setting) பெறுமொழி வாசகர் பெற இயலாமற் போய்விடும்.

மூலமொழியில் புலவர் தலைவியின் நிலையை விளக்குங்கால் அவள் ஆற்றியிருந்த நிலையைப் பதினொரு வினைத்தொடர்களை அடுக்கி இறுதியாகக் 'கிடந்தோள்' எனும் வினைமுற்றைப் பெய்து அவ்வாக்கியத்தை நிறைவு செய்துள்ளார். முதல் மொழி பெயர்ப்பில் தனித்தனியாக ஆறு வாக்கியங்களாக இவ்வாக்கியம் மாறியுள்ளது. காட்டாக,

"............... துயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியும் ஓடுவளை திருத்தியும்
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்தும்
ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி இழைநெகிழ்ந்து
இன்பல் இமிழிசை ஓர்ப்பனள் கிடந்தோள்

The Wife.................................plunged in grief

1. Directs her thoughts to him. Her loneliness

2. Now makes her, sad, and quite upsets her mind

3. She then reflecting long consoles herself

And sets her loosened bangles right Again

She shakes with passion, deeply sighs and quakes

4. Like a peahen struck with arrows from her hands

5. Her bangles slip ..........................................................
Her listening ears

6. filled with sweet and various swelling sounds.

''கருத்துத் தெளிவிற்காக மூலநூலின் மிகநீண்ட தொடர்களை ஆங்காங்கே எளிய தொடர்களாக்கியும் மொழி பெயர்க்கலாம். என்று மொழி பெயர்ப்பில் தெளிவு பற்றிக் கூறும்போது சண்முக, வேலாயுதம் கூறுகிறார். எனினும் இம்மொழி பெயர்ப்பில் மூலமொழியில் காணப்படும் ஒலியின்பமும் ஆற்றி யிருக்கும் ஆழ்ந்தவருத்தமும் கிடைக்கப்பெறவில்லை, துன்ப உணர்வின் பெருக்கத்தையும் நீட்சியையும் புலப்படுத்துமாற்றான் புலவர் பயன்படுத்தியிருக்கும் உம்மைத் தொடர்கள் உணர்ச்சித் தொடர்களாக அமைந்துள்ளன. நெடில் ஒலிகள் துயரத்தை வெளிப்படுத்துவது போன்று இத்தொடர்களின் நீட்சியும் தலைவி யின் துயரத்தைப் புலப்படுத்துவன. ஆனால் மொழிப்பெயர்ப்பில் இவை தனித்தனி வாக்கியங்களாகப் பிரிந்து எளிமையாக்கம் பெற்றிருப்பது உணர்ச்சிமிகு கவிநயத்தைச் செய்தித் தகவல்களாக மாற்றிவிடுகிறது. ஆறு ஆங்கில வாக்கியங்களும் உரைநடை விளக்கத்தைப் போல் அமைந்திருப்பது கண்கூடு.

இரண்டாம் மொழிபெயர்ப்பில் இப்பகுதி இணைப்புச் சொற் களான and but ஆகியன சேர்க்கப்பட்டுப் பல தொடர்களைக் கொண்ட ஒரே வாக்கியமாக அமைந்துள்ளது.

...... and her griefs too great to bear
Without her mind's support—(and that's gone after him)
And then she ponders long, **and** reassured, puts back
Her slipping bangles **but** seized with sadness still,
Heaves a deep sigh **and** like a peacock arrow - stuck,
Shivers, **and** her ornaments slip again.
She lies.

இம் மொழிபெயர்ப்பில் ஐந்து and மற்றும் ஒரு but என்ற இணைப்புச் சொற்கள் தலைவி வருணனையில் காணப்படுகின்றன. தொடரன் மொழிபெயர்ப்பில் - உம் என்பதற்கு இணையாக and but ஆகியன அமைகின்றன. இதனால் மூலமொழிப் பாடலில் உணர்ச்சியும் கிடைக்கப்பெறுகிறது.

## முடிவுகள்

முதல் மொழிபெயர்ப்பைவிட இரண்டாம் மொழிபெயர்ப்பைச் சிறப்பாகத் தருவதில் பின்பற்றியுள்ள முறைகள் கீழ்க்காணும் முடிவுகளைத் தருகின்றன :

1. ஒலியன் நிலையில் காணப்பெறும் ஒலிக் குறியீடுகளும், இணையான ஒலிக்குரிய எழுத்துகளும் காலப்போக்கில் ஏற்பட்டுள்ள மொழியியல் வளர்ச்சியினைப் பிரதிபலிக்கின்றன.

2. உருபன் நிலையில் முதல் மொழிபெயர்ப்பில் காணப்படும் சமஸ்கிருத ஆக்கத்தை இரண்டாம் மொழிபெயர்ப்பு நீக்கி விட்டதனை மொழிபெயர்ப்புத் துறையின் வளர்ச்சியாகக் கொள்ள முடியும். மேலும் பிறமொழிகள் மீது மொழிபெயர்ப்பாளர் கொண்டிருக்கும் நம்பிக்கையையும் அதன் தொடர்பியல் திறனையும் இத்தன்மை புலப்படுத்துகிறது.

3. தொடரன் நிலையில் முதல் மொழிபெயர்ப்பு உணர்ச்சி நிலை வாக்கியங்களை எளிமையாக்கியிருக்க, இரண்டாம் மொழிபெயர்ப்பு அவற்றை மூலமொழிக்கு இணையான அமைப்பில் பெயர்த்திருக்கிறது. ஆனால் இவ்வாறு அமைப்பு மாறாமலிருக்குமாறு கருத்துச் செலுத்தியதில் மூலமொழியின் கருத்தழுத்தம் சில சூழல்களில் மாறி இருப்பதும் நோக்குகிறது.

4. மொழிபெயர்ப்பின் நம்பகத்தன்மையை உணர்த்தும் நோக்கில் செய்யப்பட்ட இரண்டாவது மொழிபெயர்ப்பு சொல். பொருள், வடிவம் ஆகியவற்றில் கருத்துச் செலுத்தி இருக்கிறது.

5. உருபன்களை அடிப்படையாகக் கொண்டு முதல் மொழி பெயர்ப்பும் தொடரன்களை அடிப்படையாகக் கொண்டு இரண்டாம் மொழிபெயர்ப்பும் செய்யப்பட்டுள்ளது.

6. இதனால், முதல் மொழிபெயர்ப்பில் எளிமையும் தெளிவும் காணப்பட, இரண்டாம் மொழிபெயர்ப்பில் இயக்கமும் உணர்ச்சியும் (Dynamic & Sensitive) காணப்படுகின்றன.

புலமை ஜூன் 90

# கவிமணியின் 'உமார் கய்யாம் பாடல்கள்' சில மொழிபெயர்ப்புச் சிக்கல்கள்

மூலமொழியிலிருந்து பெறுமொழிக்குக் கருத்துக்களைப் பெயர்த்தளிக்கும்போது மொழிபெயர்ப்பாசிரியர்கள் கருத்து நெறியிலான சில சிக்கல்களை எதிர்கொள்கின்றனர். அவ்வேளையில் மொழிபெயர்ப்பு மூலப் படைப்பிலிருந்து விலகி புதிய படைப்பாக மாறிவிடுகிறது என்ற கருதுகோளை அடிப்படையாகக் கொண்டு இவ் ஆய்வுக் கட்டுரையின் செல்நெறி அமைகிறது. மேலும் கருத்து விலகலால் உண்டாகிய புதிய படைப்பின் வன்மை மென்மைகளையும் ஆராய்கிறது.

உமார் கய்யாம் அரபியில் எழுதிய 'ருபாயத்' எனும்செய்யுள் நூலை ஃபிட்ஸ்ஜெரால்டு ஆங்கிலத்தில் கி.பி. 1859ல் மொழிபெயர்த்தார். இதனை மூலநூலாகக் கொண்டு கவிமணி தமிழில் 1951 இல் மொழிபெயர்த்தார். கவிமணியின் 'உமார் கய்யாம்' பாடல்களில் உமார், ஃபிட்ஜெரால்டு, கவிமணி என்ற மூவரும் சந்திக்கின்ற கருத்துக் களத்தில் ஏற்படும் கருத்து முரண்களும் மாற்றங்களும் ஆய்வுப் பொருளாக அமைகின்றன.

## உமார் கய்யாம் - அறிமுகம்

எட்வர்டு ஃபிட்ஜெரால்டு தம் நூலின் முன்னுரையில் உமார் கய்யாமை சூஃபியக் கவிஞராக (ப. 6) வாசகர்கட்கு அறிமுகம் செய்கிறார். ஆனால் உமார் கய்யாமின் வாழ்க்கைப் பின்னணியை ஆராய்ந்தால் அவரை ஓர் ஒப்படைப்புள்ள சூஃபியவாதியாகக் கருதவியலாது.

உமார் கய்யாம் (1050-1123) பாரசீகத்தைச் சேர்ந்தவர். வானியல் கணித வல்லுநர். தம் அறிவு நுட்பத்தைப் பிறர் உணர்ந்து மதிப்பளிக்காததனால் மனம் நொந்து தம் உணர்ச்சியை வெளிப்படுத்தக் கவிதையை ஒரு கருவியாகப் பயன்படுத்தினார். ''படைப்பாளர்'' (கூடாரம் கட்டுபவர்) என்ற பொருளுடைய 'கய்யாம், என்பதனைத் தம் இயற்பெயருடன் இணைத்துக் கொண்டார்.

உமார் அடிப்படையில் கணித வல்லுநரேயன்றி கவிஞராக வாழ்ந்தவரல்லர். இவர் ஒரு குறிப்பிட்ட கருத்துப் பள்ளியின் ஆசிரியரும் அன்று, சூஃபியக்கருத்துக்கள் பரவிவந்த காலத்தில் அவற்றி தாக்குறவால் சிலவற்றைத் தம் நூலில் எடுத்துக் கூறினார். இக் கருத்துக்களை சில பாடல்களில் எடுத்துக் கூறியிருக்கிறார். எனவே உமாரை ஒரு சூஃபியத் தத்துவவாதி என்ற வரையரைக் குள் நிறுத்தவியலாது. பல சூஃபியக் கவிஞர்களின் கருத்துக்களை உமார் என்ற ஒருவர் பெயரில் வெளியிட்டிருப்பதாகவும் கூறுவர் (இத்ரீஸ் ஷா. 1977 : 164). மேலும் ஆங்கிலத்தில் இவர் நூல் மொழிபெயர்ப்பாகும்வரை இவருக்குப் பெருமதிப்பொன்றும் இவர் நாட்டில் கிடையாது. ஹஃபிஸ் ரூமி போன்ற சூஃபிக் கவிஞர்கள் உலகப் புகழ் பெற்றிருந்தனர் ஃபிட்ஸெரால்டுக்கு 40 ஆண்டுகட்கு முன்பு உமாரை ஆராய்ந்த வான்ஹாமர் ருபாயத்தில் எல்லா வகையான மெய்யறிவுக் கொள்கைகளும் அடங்கியிருப்பதாகக் கூறியுள்ளார்.

## ஃபிட்ஸெரால்டின் 'ருபாயத்' மொழிபெயர்ப்பு

ஃபிட்ஸெரால்டு (1809 - 1883) தம் வாழ்நாள் முழுவதும் அமைதியாகப் படித்து வந்தார். கி. பி. 1859-இல் 'ருபாயத்'தை, மொழிபெயர்ப்பு என்பதைக் காட்டிலும், ஒரு மூலப்படைப்பாக அளித்தார். இவர் பாரசீகத்திலுள்ள அடிப்படை நூல்களிலிருந்து சூஃபி தத்துவங்களை அறிந்துள்ளார். இக்கருத்துக்கள் இவர் மனத்தில் பதிந்து பக்குவப்பட்டுப் பின்பு உமாரின் செய்திகளுடன் கலந்து ஆங்கில மொழிபெயர்ப்பாக மாறியது (மு. நூ. : 166). ஃபிட்ஸெரால்டு ஆங்கில வாசகருக்குப் பழக்கமில்லாத எல்லாப் பண்பாட்டு பின்னணியையும் விலக்கி விட்டார். இனம்புரியக் கூடிய குறிப்பிடத்தக்க சில செய்திகளை மட்டும் கூறியுள்ளார். (பிரமோத் தால்கேரி 1988 :5). ஆங்கில மொழிபெயர்ப்பு உமார் கய்யாமின் கருத்தையும் பொருளையும் விட்டு விலகி நிற்பதாக அப்துல் வஹீத் லுலுவா கருத்துத் தெரிவிப்பார். (மு. நூ. : 65). மேலும் கய்யாமின் மூலநூலில் காணப்பட்ட அரபிய பாரசீகக் கலப்புப் பண்பாட்டை ஆங்கில நூலில் காணவியலாது. ஆக, உமார் கய்யாமில் காணப்பட்ட இஸ்லாமியத் தத்துவக் கருத்து

வேறுபாடுகளைத் தவிர்த்துவிட்டு சூஃபியக் கருப்பொருளை மட்டும் கொண்ட நூலாக ஃபிட்ஸெரால்டு தம் மொழி பெயர்ப்பை உலகுக்கு அறிமுகம் செய்துள்ளார்,

## கவிமணியின் 'உமார் கய்யாம் பாடல்கள்'

கவிமணி தேசிகவிநாயகம் அவர்கள் (1876-1955) கோட்டாறில் ஆங்கிலக் கல்வியும் தமிழ்க்கல்வியும் பெற்றார். கல்லூரியில் எஃப். ஏ. பட்டம் பெற்ற இவர் சிவதீட்சையும் பெற்று திருவனந்தபுரத்தில் ஆசிரியப் பயிற்சி பெற்றார். 1895-இல் முதல் கவிதை நூலை 'அழகம்மை ஆசிரிய விருத்தம்' என்ற பெயரில் எழுதினார். கோட்டாறு, நாகை, திருவனந்தபுரம் ஆகிய ஊர்களில் தமிழாசிரியராகவும், விரிவுரையாளராகவும் கல்விப்பணி புரிந்தார் பிறகு குழந்தைப் பாடல்களை எழுதினார். கல்வெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.

தமிழன் பத்திரிகையில்| 1917-18 இல் 'மருமக்கள் வழி மான்மியம்' எனும் நகைச்சுவை நூலைப் பகுதி பகுதியாக எழுதி வெளியிட்டார். 1922ல் இலக்கிய ஆராய்ச்சியில் நண்பர்களுடன் சேர்ந்து ஈடுபட்டார். தம் ஐம்பத்து ஐந்தாவது வயதில் ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். பிறகு தம் மனைவியின் கிராமத்தில் தங்கி இலக்கியப் பணியைத் தொடர்ந்தார். முதலில் 'காந்தளூர்ச் சாலை' எனும் வரலாற்றாராய்ச்சி நூலை வெளியிட்டார். 1940 ல் 'மலரும் மாலையும்' எனும் கவிதைத் தொகுப்பு வெளிவந்தது. அடுத்த ஆண்டில் 'ஆசிய ஜோதி' எனும் மொழிபெயர்ப்பு நூலையும் 'இளந்தென்றல்' எனும் குழந்தைப் பாடல் தொகுதியையும் வெளியிட்டார். 1945இல் 'உமார்கய்யாம்' எனும் மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டார். இந்நூலைத் தம் எழுபதாம் வயதில் எழுதினார். இரண்டாண்டுகள் கழித்து 'காதல் பிறந்த கதை' எனும் கவிதைத் தொகுதியை வெளியிட்டார் தம் எழுபத்தாறாம் வயதில் இயற்கை எய்தினார்.

1940 இல் 'கவிமணி' பட்டம் பெற்ற இவர் தம் வாழ்நாளில் பல பட்டங்களையும் பரிசுகளையும் பெற்று பெருமதிப்புடன் வாழ்ந்து வந்தார். இவர் பல உதிரிப் பாடல்களையும் மொழி

பெயர்த்து உள்ளார். இவர் தம் படைப்புக்களில் உயிர்நாடியாகப் பண்பாட்டுணர்ச்சி ஒன்றையே கொண்டிருந்தார். (எஸ். வையாபுரி பிள்ளை, 1952 : 388) இவருடைய தமிழ்க்கல்வியும் ஆங்கிலக் கல்வியும் இவரது பண்பாட்டுணர்ச்சியை வளர்த்தன. விஞ்ஞான மனப்பான்மையும் சமயப்பற்றும் இவருடைய பண்பாட்டுணர்ச்சிக்கு உரமளித்தன. இந்தியப் பண்பாட்டின் அடிநிலைக் கொள்கைகளுள் ஒன்றான நிலையாமையை கவிமணியின் 'உமார்கய்யாம்' பாடல் விளக்கியிருப்பது போல வேறெங்கும் தமிழிலக்கியங்களில் காண முடியாது என்று இம்மொழிபெயர்ப்புக்கு முன்னுரை எழுதியுள்ள எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் கூறும் கருத்து இவண் குறிப்பிடத்தக்கது. மேலும் கவிமணி இந்தியப் பண்பாட்டைத் தலைநோக்கமாகக் கொண்டுள்ளார் என்பதை இப்பாடல்கள் விளக்குகின்றன.'' என்றும் தெரிவிக்கிறார்.

மொழிபெயர்பாளர்கள் பண்பாட்டு முரண்பாடுகளைத் தவிர்ப்பது மொழிபெயர்ப்பின் இயல்பினது என்றாலும் கவிமணி உருவம், உள்ளடக்கம், கரு என்று அனைத்து நிலைகளிலும் மூலநூற்கருத்தினின்று விலகியுள்ளார்.

## மொழிபெயர்ப்பில் சிக்கல்கள்

ரூபாயத் மொழிபெயர்ப்பில் காணப்படும் சிக்கல் மூலநூற் கருத்தினின்று விலகியமையாகும். இக் கருத்து விலகலை, 1. கருத்துமுரண், 2. கருத்து நீக்கம், 3. கருத்துச் சேர்க்கை என மூன்றாகப் பகுத்து ஆராயலாம்.

### 1. கருத்து முரண்

ஆண்டவனிடமிருந்து நேரடியாகப் பெறும் அறிவில் நம்பிக்கையுடையது சூஃபியம். இவ் அறிவு, ஒளி, வெளிப்பாடு, தூண்டல் மூலமாகக் கிடைக்கப்பெறும் (ரேனால்டு. ஏ. நிக்கல்சன், 1966 : 70). 'நூலின்றி, ஆசிரியரின்றி, அறிவுரையாளரின்றி இவ் அறிவு தோன்றுவதாக' ரூமி கூறுகிறார் (மு. நூ. : 70). ஃபிட்ஸெரால்டில் 25—34 வரையிலான பாடல்கள் இம் மெய்யறிவு பற்றியன. சான்றாக,

'All the saints and sages who discussed' (28)
'Doctor and saint heard great argument' (27)
'With them the seed of Wisdom did I sow' (28)
'There was and then no more of Thee and Me' (32)

என்ற வரிகளைக் கூறலாம். ஜலாலுதீன் ரூமி என்ற சூஃபிச கவிஞர் கூறிய அறிவு பற்றிய கருத்துக்களை ஃபிட்ஸெரால்டு இவண் விரித்துரைக்கிறார். அதாவது தர்க்கத்தை முதலில் விளக்கிப் பின்னர் பக்தியை இறுதி முடிவாகத் தந்துள்ளார். உலகியலிலிருந்து இறையியலுக்கு மனித மனம் செல்ல வேண்டுமென்பதை இது தெரிவிக்கிறது.

கவிமணி தர்க்க ரீதியானதும் அனுபூதி ரீதியானதுமான இவ் அறிவை விடுத்து இதற்கு மாற்றாக இலக்கியத்தை எடுத்தாள்கிறார்.

...... a book of verse and Thou
Beside me singing in the Wilderness
And wilderness is Paradise enow.

என்ற வரிகளில் ஃபிட்ஸெரால்டு மெய்யறிவை (gnosis) 'A book of verse' என்று குறிப்பிட்டுள்ளார். கவிமணி இதனைக் 'கம்பன் கவி'யாக மாற்றி இறைவனால் தேர்ந்தெடுத்து அருளப்படும் அறிவை இலக்கிய இன்ப நுகர்ச்சியாக மொழிபெயர்ப்புச் செய்திருக்கிறார்.

இறை வெளிப்பாடு மூலம் கிடைக்கப்பெறும் 'gnosis' அரபியில் 'marifat' அல்லது 'irfan' எனப்படும் (மு.நு. : 7). இதற்கும் உலகியலறிவான 'eilm' என்பதற்கும்வேறுபாடு உண்டு. இறையனுபவத்தால் எய்தப்பெறும் பரவச நிலையை மதுமயக்கமாகக் கொள்வதும் இறையனுபவத்தை இலக்கிய இன்பமாகக் கொள்வதும் மூலநூற்கருத்துக்கு முரண்பட்டதாகும். அடுத்ததாக, 'திராட்சை ரசம் பருகுதல்' ஒரு குறியீட்டுத்தொடராக இறையருள்

பெறுவதனைக் குறிக்கிறது. திராட்சையை முழுமுதலுக்குக் குறியீடாகக் கொள்வர்.

"Better me merry with the fruitful Grape
Then saddenafter none or, bitter, Fruit," (39)
"Divorced old barren Reason from my bed
And took the Daugter of the Vine to Spouse" (40)
"Was never deep in anything but - Wine" (41)
"The Grape that can with Logic Absolute" (43)

என்ற வரிகளில் திராட்சையினால் பெறும் மகிழ்ச்சி இறையருளால் பெறும் இன்பத்தைக் குறிக்கின்றது.

எகிப்தியப் பழஞ்சமயத்தில் குருதியை குறிக்கும் வழக்காகத் 'திராட்சை ரசம்' வழங்கியது. சூஃபியம் சிரியன் கிறித்தவத் தாக்கம் பெற்றதனால் இவ்வழக்கு இச்சமயத்திலும் நிலைபெற்றது. பகுத்தறிவு உலகு சார்ந்தது; இஃது இறையனுபவத்துக்கு எதிரானது என்பதனால் பகுத்தறிவை விலக்கிவிட்டு திராட்சையை (முழுமுதல்) மணந்ததாகக் கவிஞர் பாடியுள்ளார். கவிமணி இதனை மொழிபெயர்க்கும் திராட்சையை அறிவுக்கு மாறாக விளங்கும் உணர்ச்சியை மணந்ததாகப் பொருள்கொண்டு எழுதியுள்ளார்.

"அல்லும் பகலும் விவேகத்தால்
அடைந்த கவலைக்கு அளவில்லை
தொல்லை நீங்க இறைவனைத்
துரத்தி விட்டுத் துணிவாகச்
செல்வி திராட்சவல்லி தரும்
தெய்வங்களை மணந்து கொண்டேன்
இல்லை துயரம் இல்லையினி
இன்பம் என்றும் இன்பமதே" (பாடல் 73)

இங்கும் கருத்துப்பொருளை உட்பொருளாக கொண்டதால் கருத்து முரண் ஏற்பட்டுள்ளது.

ஃபிட்ஸெரால்டு உலகியலின்பம் பேசும் எபிகியூரியக் கொள்கையினராக உமாரைக் கருதாமல் ஹஃபீஸ் போன்ற சூஃபிக் கவிஞர்களுள் ஒருவராகக் கருதுகிறார் (Rubaiyyat, Introduction) இதனால் சூஃபியக் கருத்துக்களைத் தம் மொழிபெயர்ப்பில் தெளிவாக வலியுறுத்தியிருக்கிறார். கவிமணி நிலையாமைக் கருத்துக்களை மட்டும் தெளிவாக எடுத்துரைக்கிறார். சான்றாக.

'மலர்ந்து நல்ல மணம் வீசி
மகிழும் மலர்கள் ஆயிரமாம்
உலர்ந்து வாடிச் சேற்றினிலே
உதிரும் அவையும்' (பாடல் 5)

'என்றும் மூடர் நன்மை உரைக்கு
இங்கும் இல்லை அங்கும் இல்லை' (பாடல் 20)

'இருக்கும் காலம் சிறிதேயாம்
இதனுள் இன்ப வாழ்வினையாம்
பெருக்குமளவு பெருக்கிடுவோம்' (பாடல் 67)

'உருளும் உலகில் ஒரு நாளும்
ஒன்றும் நிலையில் நிற்பதில்லை' (பாடல் 111)

'கலந்த திருவும் யௌவனமும்
கண்ணுக்கினிய மெய்யழகும்
குலைந்து போகும் என்றறிஞர்
கூறும் கூற்றிலே ஐயமுண்டோ' (பாடல் 5)

போன்றவை.

வாழ்க்கை பற்றிய திட்டமான உறுதிப்பாடு பாரசீக இஸ்லாமியத் தத்துவங்களில் இருந்திருக்கிறது. இவை நிலையாமையை வலியுறுத்தவில்லை. மாறாக உண்மையையும் சட்டத்தையும் ஒன்றாக மதித்தன; ஒன்றிலிருந்து ஒன்று பிரிவதனை ஏ்க

வில்லை. ஜானாயித் எனும் கவிஞர் ''உண்மையை மறுப்பவன் நம்பிக்கையற்றவன்; சட்டத்தை மறுப்பவன் சந்நியாசி'' (மூ. நூ. 92) என்று பாடியுள்ளார். இக் கருத்து ஆங்கில நூலில் வருமாறு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

''Oh come with old khayyam
and leave the wise
To talk; one thing is certain
that life flies
One thing is certain

இவ்வரிகள் இறைவனைப் பழம்படைப்பாளனாகச் சுட்டுகிறது; ஞானிகளின் சொல்லுக்கு மதிப்பளிக்கிறது; வாழ்க்கை மறைந்து விடும் என்பதனைத் தெரிவிக்கிறது; எஞ்சியவை தங்கும் என்பதற்கும் உறுதியளிக்கிறது. ஒருமுறை கிடைக்கும் வாழ்க்கையை மீண்டும் பெற இயலாது என்பதையும் எச்சரிக்கிறது. இப்பாட்டினைக் கவிமணி கீழ்க்கண்டவாறு மொழிபெயர்த்துள்ளார்.

''பலநூல் கற்ற பண்டிதர்கள்,
பலரும் சபைகள் பலகூடி
கலகம் வாதம் செய்திடுக
கண்டம் கிழிய முழங்கிடுக
மலரும் மலர்கள் வாடலும் இவ்
வாழ்வு நிலையா தோடலுமே
உலகம் கண்ட உண்மைகளாம்
உண்டோ மன்றொன்று உரைத்திடவே'' (பா. 6)

இப்பாட்டில் ஞானிகளும் வாழ்க்கையும் முக்கியத்துவம் பெறாமல் நிலையாமை முக்கியத்துவம் பெற்றுள்ளது.

2. **கருத்து நீக்கம்:**

உமர்கய்யாம் பாடல்களில் இறையனுபவத்தில் மூழ்கியிருக்கும் பரவசநிலை, பரவெளிநிலை தனிநிலை எனப்படும்

இதனை ஃபிட்ஸ்ஜெரால்டு ''The thoughtful soul to solitude retire'' என்பார். இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியத் திறனாய்வாளர்கள் இந்நிலையைத் தமிழ்ச்சித்தர்களின் 36 தத்துவமும் நீங்கிய வெட்டவெளியோடு ஒப்பிடுகின்றனர். மறைபொருள் இலக்கியங்கள் குறிப்பிடும் வனாந்தரம் அல்லது wilderness என்பதும் இப்பரவெளியே ஆகும். இத்துடன்

'வெட்ட வெளியினைச் சார்ந்து ஆனந்த
வெள்ளத்தில் மிகுகளி கூர்ந்து''

என்ற கடுவெளிச் சித்தர் வரிகளை ஒப்பிடுவர். solitude, wilderness என்ற சொற்கள் குறிப்பிடும் தனிநிலையைக் கவிமணி தம் மொழிபெயர்ப்பில் நீக்கியிருக்கிறார்.

''Wilderness'' என்னும் குறியீட்டுத் தொடர் மறைபொருளிலக்கிய வழக்காகும் (Apocalyptic phrase). உலக வாழ்வில் நிறைவற்றுப் பின் புறவுலகினின்று பிரிந்து ஆன்மா தனிநிலை அடைவதனை இச்சொல் குறிக்கிறது. இஃது உலகம் மாயை என்றோ நிலையற்றது என்றோ விலக்கிச் செல்வதன்று. இறையருளால் இந்நிலையை அடைகின்றனர். (சையது ஹுசைன்நாசர் 1972:20;) பாரசீக, எகிப்திய, யூத சமயங்கள் இறைவனை அடைய வேண்டும் என்ற ஏக்கத்தால் தனியாய் நின்று ஏங்கி அழுவதனை 'crying in wilderness' அல்லது வனாந்தரத்தில் அழுவதாகக் குறிக்கின்றன. இக்கருத்தினையும் கவிமணி நீக்கியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆன்மாவும் இறைவனும் சேரும் நிலையை

........... Me and Thee
They seemed and then no more of Thee and Me' (32)

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. 'Thee' என்பது இங்கு இறைவனைக் குறித்து வருகிறது. கவிமணி இதனை இறைவனாகக் குறிக்காமல் 'நீ' என்று பொதுவாக கூறியுள்ளார். 'இறைவனுடன் ஆன்மா இணையும் தன்மையை இறைக் காதலாகப் (Divine Love) போற்றுவர். எல்லாவற்றையும் விட்டு கடவுளைத் தழுவி

யவர்களே சூஃபிக்களாவர்' என்பார் ஜமீன்ஜன் மிஷ்ரி (ராகுல் சாங்கிருத்யாயன், 1985 : 40)

இறைக்காதலை கவிமணி உலகியல் காதலாகக் கொண்டுள்ளார். இறைவனைத் திராட்சையாகக் குறிப்பது மறைபொருளிலக்கிய வழக்கு. திராட்சைச்சாறு பருகுதல் இறையருள் பெறுவதன் குறியீடாக விளங்குகிறது. இதனை வெறும் மதுவாகக் கொண்டு கவிமணி பாடியுள்ளார். இறைவனைக் குறிக்குமிடங்களில் பெண்ணைக் குறித்துள்ளார்.

''பெண்ணே ! கிண்ணம் நிறையம்மா ! (71)
வண்ணக்கிளியே! ஒரு கிண்ணம்,
மதுவை ஊற்றித் தருவாயே' (72'

''வாழ்வின் கிண்ண மது
வற்றி வறண்டு போகும் முன்னம்
பருக மதுவைத் தாரீரோ ?
பாய் விட்டெழுந்து வாரீரோ ?
அருமை மங்கை மாரே''
''கிண்ணம் நிறைய எனக்கு
இனிய மது நீ வார்த்திடம்மா'' (77)

என்ற வரிகளைச் சான்றாகக் காட்டலாம். நூல் முழுவதும் சீராக 'மது' 'திராட்சை ரசம்' ஆகியவற்றைக் குறியீட்டுப் பொருளில் வழங்காமல் நேரடிப்பொருளைவலியுறுத்தியதனால் நூலின் மையக் கருத்து எபிகியூரியக் கருப்பொருளை ஒத்ததாகக் காணப்படுகிறது.

மொழிபெயர்ப்பாசிரியர் இறைப்பற்றும் சமயவுணர்ச்சியும் உடையவராயினும் இந்நூலின் மையக்கருத்துக்களை நீக்கியது இவருக்கு மூலநூலின்கண் கருத்துப்பிடிப்பு இல்லாமையைப் புலப்படுத்தும்.

## 3. கருத்துச் சேர்க்கை

கவிமணியின் தமிழ் மொழிபெயர்ப்பு 1945-இல் பதிப்பிக்கப் பெற்றது. சுதந்திரப் போராட்டத்தின் இறுதிக்கட்ட காலமாதலால் ஒற்றுமை வலியுறுத்தப்பட்டது. பிரிவினைவாதங்கள் மறுக்கப்பட்டன. இக்கருத்துக்களால் பாதிக்கப்பெற்ற கவிமணி இவற்றைத் தம் மொழிபெயர்ப்பின் பிற்பகுதியில் பாடல் தோறும் கூறியுள்ளார். தேசியம் ஒன்றே உயிர்மூச்சாக இருக்கவேண்டிய காலத்தில் சமயமும் பிரிவினையை வலியுறுத்துவதாக உணர்ந்தார், இப் போக்கினைக் கண்டிக்க இம் மொழிபெயர்ப்பை ஒரு பிரச்சார நூலாகப் பயன்படுத்தியுள்ளார்.

''எண்ணில் சமயவாதிகள்
  இருளில் அலைந்து திரிகின்றார்
கண்ணில் காண்பது ஒன்றுமிலை
  கையில் தீபம் ஏதுமில்லை
விண்ணும் அதிர முழங்கிட
  வீணர்ச் சண்டை மூட்டிடுவார்
மண்ணில் மனித ஒற்றுமையை
  வாளால் கீறி வகிர்ந்திடுவார் (பா 65)

என்ற பாடல் பிரிவினைக்கு வழி வகுக்கும் சமயவாதிகளின் முறையற்ற போக்கைச் சுட்டுகின்றது.

கோயில் வழிபாடு, விழாக்கள், சாதி போன்றவற்றைச் பாடியுள்ளார். சான்றாக

''ஆலயங்கள் ஏனய்யா!
  அபிஷேகங்கள் ஏனய்யா!
கோலங்கொடிகள் ஏனய்யா!
  கொட்டும் முழக்கம் ஏனய்யா!
பாலும் பழமும் வைத்துநிதம்

பணிந்து நிற்பது ஏனய்யா!
சீலம் பேணும் உள்ளத்தைத்
தெய்வம் தேடி வாராதோ!'' (பா.96)

என்பதனையும்,

''ஓதும் வேதம் ஒன்றுமில்லை
உருட்டும் மணிதாழ் வடமுமில்லை
ஆதிகோயில் தேடிநிதம்
அங்குமிங்கும் அலைவதில்லை
சாதி இல்லை மதமும் இல்லை'

என்ற வரிகளையும் கூறலாம். (பா. 109)

## முடிவுகள்

மொழிபெயர்ப்பின் கருப்பொருள் மாறக்கூடாது; மாறினால் மொழிபெயர்ப்பின் நம்பகத்தன்மை பாழ்பாடும் என்று நைடா போன்ற மொழிபெயர்ப்பறிஞர்கள் கூறிய கருத்துக்கு மாறாக உமார் கய்யாமின் 'ருபாயத்' மொழிபெயர்ப்பு விளங்குகிறது. வடிவம் மொழிபெயர்க்கப்படும்போது சொல் அடிப்படை அல்லாக அமைகிறது. சொல் உணர்த்துவது சொற்பொருளா? நுண் பொருளா? என்பதை உணர்ந்து மொழிபெயர்க்கவேண்டும். இவ் இரண்டு முறைகளும் கவிமணியின் மொழிபெயர்ப்பில் காணப் படாதது கருத்துப் பிறழ்ச்சிக்கு முக்கிய காரணமாகும்.

கவிமணியின் மொழிபெயர்ப்பில் முதற்பகுதி மூலநூல் சார்ந்தும், பிற்பகுதி வாழ்க்கையில் நம்பிக்கையிழந்த கவிஞனின் புலம் பலாகவும் அமைந்திருக்கின்றது. பொதுவாக, ஐரோப்பியப் புனைவியலின் வீழ்ச்சிக்காலத்தைச் சேர்ந்த கவிஞர்களின் படைப் புக்கள் வாழ்க்கையில் நம்பிக்கையிழந்து புலம்பும் தன்மையினவாய் அமைந்துள்ளன என்று திறனாய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் அக்கவிஞர்கள் sensualism, sadism, satanism என்ற மூன்று படுகுழிகளில் வீழ்ந்தவர்களாகவும் மதிப்பிடப்படுகின்றனர்.

தமிழ்ப் புனைவியல் கவிதை இலக்கியத்தில் கவிமணியும் இத் தகையப் புனைவியல் வீழ்ச்சிக் காலக்கவிஞராகவே மதிப்பிடப் படுகிறார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது (பா. ஆனந்தகுமார் 1988).

மேலும், கவிமணியின் இறுதிக் காலத்தில் (70வது வயதில்) எழுதப்பெற்ற நூல் என்பதால், கவிமணி தம் உடலும் மனமும் தளர்ந்த நிலையில் நிலையாமையில் ஆழ்ந்த பிடிப்புடையவராக உமார்கய்யாம் மொழிபெயர்ப்பை உருவாக்கி இருக்கிறார். ஆயினும் அவருடைய இயல்பான புலமைத் திறத்தால் பாடல்கள் மொழிபெயர்ப்புப் போலத் தோன்றாமல் கவிநயமும் ஒலிநயமும் சிறக்கத் திகழ்கின்றன.

ஃபிட்ஸெரால்டு சூஃபியம் என்று முத்திரை பதித்திருக்க அதனைக் கவிமணி நிலையாமை என்று மாற்று முத்திரை பதித் திருக்கின்றார். இப் போக்கு, மொழிபெயர்ப்பாசிரியர்களின். அறி விற்கும் சூழலுக்கும் ஏற்ப மூலநூற் கருத்துக்கள் மாற்றம் பெறுவ தனைக் காட்டுகின்றது. மொழிபெயர்ப்புக் கோட்பாடு வழி நின்று நோக்கும்போது கவிமணியின் 'உமார்கய்யாம் பாடல்களை' மொழிபெயர்ப்பு என்று கொள்வது கடினம்.

## சான்றாதாரங்கள்


1. பா. ஆனந்தகுமார் தமிழில் புனைவியல் இயக்கம், புதன் வட்டக்கருத்தரங்கக் கட்டுரை, தமிழியல்துறை, ம.கா பல்கலைக்கழகம், மதுரை, 1988.

2. சண்முகம், கவிமணி, திலக் புத்தகாலயம், காரைக்குடி. 1971.

3. மு. சண்முகம் பிள்ளை, கவிமணி கவிதை, பாரிநிலையம் சென்னை. (பதிப்பு ஆண்டு இல்லை)

4. மணவை முஸ்தபா (தொ. ஆ.) தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள், மீராபௌண்டேஷன் வெளியீடு சென்னை. 1980

5. யோகியார் ச.து.சு.(மொ.பெ) உமர்கய்யாம் அருளிய ரூபாயத் ஸ்டார் பிரசுரம், திருச்சி 1946 (III)

6. ராகுல் சாங்கிருத்யாயன் இஸ்லாமியத் தத்துவ இயல் NCBH, சென்னை 1985

7. வையாபுரி பிள்ளை எஸ். தமிழ்ச்சுடர் மணிகள், பாரி நிலையம் சென்னை 1952 (II)

8. Idris Shah THE SUFIS Octagon Press, London 1977 (II)

9. Pramod Tolgeri, S.B. Verma, (Edrs) Literature In Translation Popular Prakashan, Bombay 1918

10. Reynol A Nicholson The Mystics of Islam, Routledge and Kegan Poul Ltd., London 1966

11. Setyyed Hossein Nasr Suff Essays, George Allan & 1977 Unwin Ltd., London

12. Sujit Mukherjee Transtation as Discovery Allied Publication Pvt. Ltd. New Delhi 1981

13. Hazrat Inayat Khan The Sufi message of Hazarat Inayat Khan Vol. Barrie & Rocklif, London

— 'நாவாவின்' ஆராய்ச்சி, அக்டோபர் 1990.

# திருக்குறள் மொழிபெயர்ப்பில் சமயப்பின்னணி

மொழிபெயர்ப்பு தன்னளவில் ஒரு கலையாக விளங்குகிறது. மூலநூலில் காணப்படும் சொற்களுக்கு நிகரான சொற்களை அமைப்பதால் மட்டுமே நல்ல தரமான மொழிபெயர்ப்பினை உருவாக்கிவிட முடியாது. மொழிபெயர்ப்பில் சொற்களைக் காட்டிலும் கருத்துகளே முக்கியத்துவம் பெறுகின்றன.

உலகின் பல்வேறு மொழிகளில் பொதுமறை திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இந்நூலை ஐரோப்பிய நாட்டிற்கு முதன்முதலில் அறிமுகம் செய்தவர் வீரமாமுனிவரே ஆவார். இவரை எல்லிஸ், டுரு. ஜி. யூ, போப் ஆகியோர் மொழி பெயர்த்துள்ளனர். இவர்கள் தம ஆங்கில மொழிபெயர்ப்புகளில் சரியான கருத்தைப் புலப்படுத்துவதில் பல சிக்கல்களைச் சந்தித்துள்ளனர் இவற்றுள் ஒன்றை மட்டும் இக்கட்டுரை ஆராய்கிறது

ஆங்கில மொழிபெயர்ப்பாளரான பெஸ்கி (வீரமாமுனிவர்) டுரு, போப்,எல்லிஸ் ஆகியோர் அனைவரும், கிறிஸ்தவ சமயப் போதகர்கள், இவர்கள் 'கடவுள் வாழ்த்து' அதிகார மொழிபெயர்ப்பில் பயன்படுத்தியுள்ள சொற்களை ஆராயும் போது சமயப் பின்னணியின் தலையீடு இருப்பதனைக் காணலாம்.

கடவுள் வாழ்த்து அறிஞர்களிடையே பல விவாதங்களை எழுப்பியது. சமயச் சார்பில்லாதது என்று சிலரும் இன்ன சமயம் சார்ந்தது என்று சிலரும் வாதிடுகின்றனர். இந்நிலையில் இவ்வதிகாரத்தில் உள்ள 'சேர்ந்தார்' எனும் ஒரு சொல்லை மட்டும் ஆராயலாம். இச்சொல் சமயப்புரிதிறனுடையது, நான்கு குறள்களில் இடம் பெறுகிறது. 'மலர்மிசை' ஏகினான் மாணடி சேர்ந்தார், 'வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்', 'தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்,' 'அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்' ஆகியன இச்சொல் இடம் பெறும் அடிகளாகும்.

'சேர்ந்தார்' எனும் இச்சொல்லுக்கு சென்னைப் பலகலைக் கழக அகராதி ஒன்றுகூடுதல், கலத்தல், நட்பாதல், இணயதல், உரித்தாதல், இடைவிடாது தியானித்தல் என்று பொருள் தரு கிறது, ஃபப்ரீஷியஸ் நிகண்டு கூட்டு, இசைவு கலப்பு' இணைப்பு, ஏற்றுக் கொள் என்று பொருள் தருகிறது.

இச்சொல்லுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பாளர்கள் அளிக்கும் சொற்களாவன

| | |
|---|---|
| ஜி. யூ. போப் | — gain |
| எஃப். டபிள்யூ. எல்லிஸ் | — adore |
| ட்ரூ | — united |

இச்சொல் ஒவ்வொன்றிற்கும் சொற்பொருளும், சமயப் பொருளும் ஆராய்வோமானால் இதன் தேர்ந்தெடுப்பின் பின்னணியை அறிய முடியும.

ஜி.யூ. போப் பயன்படுத்திய 'gain' 'மிகையாகப் பெற்ற' என்ற பொருளில் வரும் வர்த்தகச் சொல்லாகும். இதற்கு கிறிஸ்தவ சமய அகராதி dishonest price, hire, ircrease, work, greedy, trading என்று பொருள் தருகிறது. இச்சொல் சமயப் பொருள் பெற்றதன்று. இறையியல் பின்னணியில் இதனை இவர் எடுத்தாளவில்லை. மனிதன் பெறும 'மிகு'பயன் இறைவனடி சேர்தலாகும் என்ற பொதுப் பொருளில் இதனைப் பயன்படுத்தியிருக்கிறார் என்று கூறலாம்.

எல்லிஸ் 'adore' என்னும் சொல்லை எடுத்தாண்டுள்ளார் இச்சொல் — wo-ship, honour, venerate, admire, idolize, reverence. என்ற பொருளில் வரும் இதற்குரிய மூலவடிவம் இலத்தீன் மொழியில் காணப்படுகிறது. எபிரேயத்தில் உள்ள (1) אדירים அடோரயீம் என்னும் பன்மைச் சொல் double honour—மதிப்புகள் என்ற பொருளைத் தரும் (2) אדרם— அடோராம் எனும் ஒருமைச் சொல் high honour பெருமதிப்பு என்ற பொருளைத் தரும். இவையிரண்டும் 'மதிப்பு. என்னும் பொருளை விளக்குகின்றனவேயன்றி 'சேர்தல்' எனும் பொருளைக் குறிக்கவில்லை இறைவனைப் போற்றுதல் எனும் பொருளையே adore தந்துள்ளது எனலாம்.

ட்ரூ பயன்படுத்தியிருக்கும் United என்பது 'ஒன்று கூடுதல்' என்னும் பொருளை உடையது. இதன் பெயர் வடிவமான (noun form) Union என்பதன் அடிச் சொல்லான Uni' கிரேக்கச் சொல்லான ἑνοτες "ஹெனோட்டேஸ்" என்பதிலிருந்து தோன்றியது. இதற்குரிய எபிரேய மூலம் 'யாகர்' יַחַד என்பது. இதற்கு 'at one' 'together' என்பன பொருளாகும். Union என்பதற்கு கிறிஸ்தவச் சமய அகராதி தரும் பொருள், 'enter fully into his presence' என்பது. Union of. God' என்ற தொடர் கடவுளுடன் இணைவதனைக் குறிக்கிறது இச் சொல் கிரேக்கத்தில் என் கிரிஸ்டோ ev Xριστω, தமிழில் கிறிஸ்துவுக்குள், ஆங்கிலத்தில் in Christ என்று. இன்றும் எழுதப்படுகிறது.

இஃது இரு வகைப்படும். 1) faith union of the soul with God; 2) metaphysical union of God wtrh soul முதலாவது, மனிதன் இறைவனிடத்தில் காட்டும் அன்பு இரண்டாவது, இறைவன் மனிதனைத் தேர்ந்தெடுக்கும் கருணை; மனிதன் இறைவனுடன் அன்பினால இனைவதை a loving communion, என்கின்றனர். இப்பின்னணியில் ட்ரூ 'united' என்பதனை 'சேர்ந்தார்' என்பதற்குப் பயன்படுத்தி இருக்கிறார் என்று கொள்வது பொருத்தமுடையதாகும்.

போப் அவர்கள் சமயப் பின்னணியில்லாத பொதுச் சொல்லை பயன்படுத்தியிருக்கிறார். எல்லீஸ், போற்றுதல் எனும் பொருளைத் தரும் சொல்லை எடுத்தாண்டிருக்கிறார். ட்ரூ உரிய பொருளுடைய சமயச் சொல்லை அளித்திருக்கிறார். ஆனால் இவர்களில் எவரும் பயன்படுத்த 'abide' எனும் கிறிஸ்தவ சமயச் சொல்லை இந்திய மொழிபெயர்ப்பாளரான திருவாசகமணி எடுத்தாண்டுள்ளனர் 'abide' என்றால் 'to go in' enter, come to be joined என்று அகராதி பொருள் தருகின்றது. Abide in me என்ற சமயத் தொடர் 'என்னுள்' உறைக, என்னும் பொருளில் வழங்குகிறது. இதனை இன்னும் அன்றாட வழக்கில் சமய வாழ்வு வாழ்வதாகக் கருதுபவர்கள்

'கிறிஸ்துவுக்குள்' என்று பயன்படுத்துகின்றனர் 'Abide' என்பது 'சேர்ந்தார்' என்பதன் பொருளைப் புலப்படுத்துகிறது. ஆயினும் இதனைக் கிறிஸ்தவ மொழிபெயர்ப்பாளர் எவரும் பயன்படுத்தாதது. வியப்பைத் தோற்றுவிக்கிறது.

பிற சமயத்தார் ஒரு நூலை மொழிபெயர்க்கும் போது அச் சமயப் பின்னணியும் பெறுமொழி நூலில் காணப்படும் வேறு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியில் மொழிபெயர்க்கும் போது சொற்களின் மூல மொழி எது என்பதை அறிந்து பயன்படுத்த வேண்டும் என்பதை இதன் வழி உணரலாம்.

# துணை நூற்பட்டியல்

1) திருக்குறள் மூலமும் உரையும்

2) உரைப்பாயிரம் (அறத்துப்பால்) - தண்டபாணி தேசிகர்

3) J.P. Fabricius's Tamil & English Dictionary.

4) Concise Psychological Dictionary

5) Tamil Lexicion Vol III Madras University 1928

6) Analytical concordance to the Holy Bible—Robert Young 1939.

7) திருமறைச் சொற்பொருள் விளக்கம் — TTBC, பங்களூர்.

8) The Contemporary Debate on God, P. David, 1969.

9) An Introductron to Indian Christian Theology Robin Boyd. 1969.

10) Contribution of European Scholars to Tamil, T.P.M.